Page missing P.385-448.




### டைம்ஸ் பத்திரிகையின் எச்சரிக்கை.

லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகை இந்திய நிலைமையைப் பற்றி எழுதுவதாவது:—இந்திய நிர்வாகத்திற்கு எந்தக் கவர்ன்மெண்டு ஜவாப்தாரியாக விருப்பதாயினும் இப்பொழுதுள்ள நிலைமை யிருந்து வருவதாயின், இந்த அவசரச் சட்டங்களோ அல்லது இவற்றைப் போன்ற சட்டங்களோ நீடித்து வரவேண்டுவது அவசியமாகிறது. ஆனால் அவசரச் சட்டங்களே எதையும் முடிவு செய்வதற்கில்லை. கவர்ன்மெண்டின் முழுக்கொள்கையும் அப்படியே நிறைவேற்றப்படாத பக்ஷத்தில், காங்கிரஸின் கக்ஷி இன்னும் வலுப்பட்டு, சட்ட விரோதமான காரியங்களும் அதிகரிக்கக் கூடும். ஏனெனில் அரசியல் திருத்த ஏற்பாட்டை இப்பொழுது எதிர் பார்த்து வரும் மிதவாதிகள் கூட இதனால் எதிராகப் போய்விடக் கூடும்.

### சீன ஜப்பானிய சமரஸ ஒப்பந்தம்.

சீன ஜப்பானிய யுத்த நிறுத்த ஒப்பந்தம் ஷாங்கேயில் கையெழுத்தாயிற்று. ஆகவே அங்கு சீன ஜப்பானிய போராட்டம் இதன் மூலம் முடிவடைந்தது.

### அயர்லாந்து பிரமாண ரத்து மசோதா.

ராஜ விசுவாசப் பிரமாண ரத்து மசோதாவைத் திருத்தி, பிரமாண முறையை வைத்துக் கொண்டு, அதை அங்கத்தினர்கள் இஷ்டத்திற்கு விட்டு விடுவதென்று அயர்லாந்து டெயிலில் எதிர்க்கக்ஷியினர் கொண்டு வந்த பிரேரணை கமிட்டிப் பரிசிலனையில் நிராகரிக்கப்பட்டது. 76 பேர்கள் விரோதமாகவும், 53 பேர்கள் சாதகமாகவும் ஓட் செய்தனர். தொழில் கக்ஷியினர் இப்பொழுதும் பியன்னு பெயில் கக்ஷியை ஆதரித்தனர்.

டெயில் கமிட்டியாக விருந்து பிரமாணரத்து மசோதாவை முடிவில் நிறைவேற்றிற்று. சாதகமாக 77 வோட்டுகளும் பாதகமாக 67 வோட்டுகளும் கொடுக்கப்பட்டன.

### அவசரச்சட்ட அமுல்கண்டனம்.

மிஸ்டர் ஸ்டூவர்ட் ஹாட்ஸன் லண்டன் 'நியூஸ் குரானிகிள்' பத்திரிகையில் எழுதுவதாவது:—அவசரச் சட்டங்கள் பொதுவாக பயங்கரக் கொள்கைகளை ஒடுக்கி விட்டன. ஆனால் அதற்காக கவர்ன்மெண்டார் இப்பொழுது மிகவும் கஷ்டமான நிலைமையைச் சமாளிக்க வேண்டுவதாக விருக்கிறது. கால எல்லையின்றி அவசரச் சட்டங்களைக் கொண்டே இந்தியாவை ஆளுவதென்பது எப்பொழுதும் சாத்தியமில்லை. இப்பொழுதும் சாத்தியமில்லை. இந்த ஆட்சி முறை சீக்கிரத்தில் பயனற்றதாகப் போக வேண்டுவது தான். போலீஸ் சட்டங்களெனக் கருதப்படும் அவசரச் சட்டங்களின் பயனாக புத்திசாலித்தனமான ஒரு முன்னேற்றக் கொள்கையை யனுஷ்டிப்பது மிகவும் கஷ்டமாகப் போயிற்று.

உடனே மாகாண சுய ஆட்சியை மாத்திரமளிப்பதென்ற யோசனை இந்தியர்களால் பெரிதும் சந்தேகிக்கப்படுகிறது. ஆகவே அதற்கு எதிர்ப்புமதிகமே ஏற்படுகிறது. ஆனால் ஒன்றுமே செய்யாமலிருப்பது போல் ஆபத்துக் காமானது வேறொன்றுமில்லை.

கவர்ன்மெண்டார் கூறியுள்ள உறுதிமொழிகளை நிறைவேற்றுவதற்கான தைரியமும் உறுதியும் இல்லாமல் போகலாம். ஆனால் இந்த ஒரு கொள்கையும், காரியத்தில் தைரியமும் தான் உண்மையான புத்திசாலித்தனத்தைக் காட்டக்கூடும்.

### ஸாங்கிக்கமிட்டி வேலை.

மிஸ்டர் வார்ட்லா மில்னி காமன்ஸில் ஒரு கேள்வி கேட்கையில் லார்டு ஸாங்கி அரசியல் திட்டத்தைத் தயாரித்து வருவதாக இந்தியா வெங்கும் பிரபலமாகக் கூறப்படுவதாக வற்புறுத்தினர்.

ஸர் ஸாமுயல் ஹோர் பதிலளிக்கையில், ஸாங்கிக் கமிட்டி வேலை மந்திரி சபைக் கமிட்டிக்குதவிபுரியவே பூர்வாங்கமாக நடத்தப்படுவதாக அறிவித்தார்.

### பிரஞ்சு தேர்தல் முடிவு.

பிரஞ்சு ஜனபிரதிநிதி சபைக்கு நடைபெற்ற தேர்தலின் பயனாக அபேதவாதக் கக்ஷியினருக்குத் திட்டமாக வெற்றி யேற்பட்டிருக்கிறது. கவர்ன்மெண்டிற்கெதிராக 88 அதிகப்படி பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர். ஐந்து சார்பு நாடுகள் முடிவு தவிர மற்றப்படி ஜனப்பிரதிநிதி சபையில் கக்ஷிகளின் நிலைமை பின்வருமாறு:—

கவர்ன்மெண்டு கக்ஷி:-தீவிர மிதவாதிகள் 8. மிதவாதிகள் 131. மிதவாதக் குடியரசுக் கக்ஷியினர் 63. மத்தியக் கக்ஷி 62.

கவர்ன்மெண்டிற்கெதிரான கக்ஷி:—ராடிகல்கள் 149. குடியரசு அபேத வாதிகள் 50. அபேதவாதிகள் 129. பொதுவுடமை 21.

இப்பொழுதுள்ளபடி டார்டியூ கவர்ன்மெண்டு ராஜிநாமாச் செய்துவிட்டது.



இந்திய கிரக்கெட் கோஷ்டியினர்களுக்கு லண்டன் ஸேவாய் ஹோட்டலில் அளிக்கப்பட்ட விருந்து. உட்கார்ந்திருப்பவர்கள் (இடது புறமிருந்து) இந்தியா மந்திரி ஸர் ஹோர், போர்பந்தர் மகாராஜா (கோஷ்டித் தலைவர்) லார்டு ஹாக், ஸ்ரீமான் ஸி. கே. நாயுடு. வலது புறக்குந்து நிற்பவர்கள் டம்பாய், வங்காள கவர்னர்களாகவிருந்த ஸர் வில்ஸனும், ஸர் ஜாக்ஸனும். G.S.A.

### இங்கிலாந்தில் இந்தியர் கிரிக்கெட் விளையாட்டு.

இங்கிலாந்தில் ஹோவ் என்ற விடத்தில் ஸஸெக்ஸ் கோஷ்டியாருடன் இந்தியகிரிக்கெட் கோஷ்டியார் முதல் போட்டி விளையாட்டு நடத்தியதில் முதல் ஆட்டத்தில் 236 ரன்கள் எடுத்தனர். விளையாட்டு முடிவில் ஸஸெக்ஸ் கோஷ்டியார் விளையாட வாரம்பித்தனர். அவர்களில் இரண்டுபேர் ஆடியதில் 32 ரன்கள் எடுத்தனர். இரண்டாம் நாள் விளையாடியதில் ஸஸெக்ஸ் கோஷ்டியினர் முதல் ஆட்டத்தில் 222 ரன்கள் எடுத்தனர். இந்தியர்கள் அதிகப்படியான 14 ரன்களுடன் இரண்டாவது ஆட்டமாரம்பித்தனர். ஆட்ட முடிவில் அவர்கள் ஒரு விக்கெட் ஆடித் தீர்ந்ததில் 49 ரன்கள் எடுத்திருந்தனர்.

மூன்றாம் நாள் விளையாடியதில் டிராவாக (ஒரு கக்ஷிக்கு ஜெயமென்பதின்றி) முடிந்தது. இந்தியர் முதல் ஆட்டத்தில் 236 ரன்கள் எடுத்தனர். இரண்டாவது ஆட்டத்தில் 6 விக்கெட்டுகளுக்கு 247 ரன்கள் எடுத்து இத்துடன் தங்கள் ஆட்டத்தை நிறுத்திக் கொள்வதாக அறிவித்தனர். பிறகு ஸஸெக்ஸில் இரண்டு பேர்கள் 107 ரன்கள் எடுக்கவே காலமானதால் ஆட்டம் முடிவடைந்தது.

### 75000 வருஷங்களான மனித எலும்புக்கூடு.

பாலஸ்தீனத்தில் அத்லிட்டுக்குச் சமீபத்தில் ஆங்கிலோ அமெரிக்கக் கோஷ்டியினர் சுரங்கங்களை வெட்டி ஆராய்ச்சி செய்ததில் வயதான முஸ்திரியர் மூவருடைய எலும்புக் கூடுகள் கண்டெடுக்கப்பட்டன. இவை 75000 வருஷ காலமாக விருப்பவை யென மதிப்பிடப்படுகிறது.

யேலைச்சேர்ந்த ஆராய்ச்சிக் காரரான மிஸ்டர் மாக்கர்டி இதைப்பற்றி அபிப்பிராயம் வெளியிடுகையில், சரித்திரத்திலேயே இதுவரையில் காணப்படாத சிறந்த சாமான்களாக இவை இருக்கின்றன வென்று அறிவித்தார்.

### சிறையில் நிர்வாணக் கைதிகள்.

பிரிட்டிஷ் கொலம்பியா தலைநகரிலுள்ள சிறை நிரம்ப 117 பேர்கள் போல் நிர்வாணமாய் ஆணும்பெண்ணுமாக கூடியிருக்கின்றனர். இவர்கள் கைது

செய்யப்பட்ட கோபார்கள். இவர்களைப்பிரஷ்டஞ்செய்வது பற்றிக் கவர்ன்மெண்டார் ஆலோசனை செய்து வருகின்றனர். உடம்பெல்லாம் அரித்துப் பிடுங்குமாறு ஒரு பவுடரை இவர்கள்மீதுபோலீஸார் போட்டும், இவர்கள் மேலே ஆடைகள் அணிய மறுத்தனர். இத்தகாறு வெகுகாலம் கடுமையாக நடைபெற்றது. போலீஸார் முடிவில் இவர்களைத் தெருவில் ஒருங்கே கூட்டமாகச் சேர்த்துச் சிறைக்குக் கொண்டுபோனார்கள்.

## ஜெர்மனியில் பொதுவுடமைக் கெதிரான நடவடிக்கை

'கடவுளுக்கெதிரான' எல்லாப் பொதுவுடமைக் கட்சிச் சங்கங்களையும் கலைப்பதான ஒரு அவசரச் சட்டம் ஜெர்மனியில் வெளியிடப்பட்டது. இச்சங்கங்கள் ஒரு போல்ஷிவிக் புரட்சி யுண்டுபண்ணுவதற்காகக் கிறிஸ்தவ மத நாகரீகத்தையே அழித்துவிடுவதாக விருக்கின்றனவென்று காரணம் கூறப்பட்டது.

அரசியல் கட்சிகளை நன்கு பரிசீலனை செய்து அவற்றின் ராணுவ பலத்தை வெகுதூரம் குறைப்பதற்கான மற்றொரு அவசரச் சட்டமும் வெளியிடப்பட்டது.

## தூர கிழக்குத்திசையில் ஸோவியத் கொள்கை.

ஸோவியத் தூர கிழக்குதிசை பிரதேச ராணுவ தளகர்த்தரான மிஸ்டர் புளூசர் கபாராவஸ்கியில் மே தினக் கொண்டாட்டத்தில் பேசியதாவது:- ஸோவியத்தினரின் கூட்டுப் பிரதேசத்திற்குள் எந்த அன்னியனும் அடிவைக்க நாங்கள் இடம் கொடுக்க மாட்டோம். உண்மை யுத்தத்திற்கான ஆரம்பம் எங்கள் கிழக்கு எல்லையிலிருந்து வெகு தூரத்திலில்லை. ஆனால் ஸோவியத் பிரதேசத்தைப் பாதுகாக்க ஸோவியத் கிழக்குத் திக்குப்படை எப்பொழுதும் தயாராக விருக்கிறது.

உலக முதலாளிகள் அவர்கள் துவேஷிக்கும் ஸோவியத் யூனியனை நசுக்கிவிட விரும்பினாலும், ஸோவியத்தினர் தங்களிஷ்டப்படி அபேத பொருளாதாரக் கொள்கையை நிறைவேற்றிக்கொள்ள தனித்துவிடப்படவேண்டு மென்றே விரும்புகின்றனர்.

## ஆஸ்டிரேலிய கவர்ன்மேண்டு தகராறு.

நியூஸவுத் வேல்ஸ் பிரதம மந்திரியான மிஸ்டர் லாங்குக்கும் ஆஸ்டிரேலியாவின் மற்றப் பாகங்களுக்கும் ஏற்பட்டிருக்கும் தகராறில், பெடரல் கவர்னமெண்டார் இப்பொழுது கடைசியாக ஒரு நடவடிக்கை யெடுத்துக் கொண்டிருக்கின்றனர். ரெயில்வே வருமானம் தவிர நியூஸவுத் வேல்ஸின் வருமான பாக்கி யெல்லாவற்றையும், பறிமுதல் செய்யும்படி பெடரல் கவர்ன்மெண்டார் ஒரு உத்தரவு பிறப்பித்திருக்கின்றனர்.

இரண்டாவது உத்தரவொன்றும் சீக்கிரத்தில் வெளியிடப்படும். ரெயில்வே ஸர்விஸ் நடந்து வருவதற்குமாத்திரம் பண மனுமதித்து ரெயில்வே வருமானத்தில் ஆறில் ஒரு பாகத்தைப் பறிமுதல் செய்யும்படி இவ்வுத்தரவில் கூறப்படுமெனத் தெரிகிறது.

## ஹானுய்தீவில் பெரும்புயல்

தென் அன்னாமில் அடித்த பலமான புயலின் பயனாக 500 பேர்கள் கொல்லப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

## குருகர் தற்கொலை மர்மம்.

குருகர் கம்பெனிகள் ஸ்டாக் ஹோமிலிருந்து அனுப்பிய தந்திகளை யெல்லாம் ரகசியப் போலீஸார் பரிசீலனை செய்ததன் பயனாக குருகர் கம்பெனித் தகவல்கள் வெளியானது சம்பந்தமாக மற்றும் பலர் கைது செய்யப்படலாமென்று பத்திரிகைகள் கூறுகின்றன. குருகரின் ரகசிய ஏஜண்டுகளுடையவும் அவர் கூட்டாளிகளுடையவும் யூரா ஜாப்தாவையும் பெறவேண்டு மென்பது போலீசாரின் உத்தேசமாகும். அவருடைய மற்ற நடவடிக்கைகளிலும் போலீஸார் உட்புகுந்து பரிசீலனை செய்து வருகின்றனர். சர்வதேசத் தீக்குச்சிக் கம்பெனியின் பாபர் வழக்குவிசாரணையில் அக்கம்பெனிக்கு வரவேண்டியது 164000 டாலர்களென்றும், கம்பெனியின் கடன் 10 கோடி டாலரென்றும் கணக்கிடப்பட்டது.



சுட்டுக் கொல்லப்பட்ட மிதனபுரி மாஜிஸ்டிரேட் மிஸ்டர் ராபர்ட் டக்ளஸ். PPB



சுட்டுக் கொல்லப்பட்ட பிரஞ்சுக் குடியரசுத் தலைவர் பால் டுமேர் GSA

## சார்பு நாடுகளில் தொழிலாளர் நிலைமை.

காமன்ஸ் சபையில் சார்பு நாட்டு மந்திரி கேள்விக்குப் பதிலளிக்கையில் கட்டாயத் தொழில் சம்பந்தமான சர்வதேசஒப்பந்தத்திற்கு விரோதமாகவிருந்த சட்டப் பிரிவுகளைத் திருத்த சார்பு நாடுகளில் சட்டங்கள் செய்யப்பட்டிருக்கின்றனவென்றும், அவசியமான விடங்களில் திருத்தச் சட்டங்கள் ஆஜர் செய்யப்பட்டிருக்கின்றனவென்றும், ஜூன் 3-ந் தேதி முதல் அமுலுக்கு வரும் ஒப்பந்தத்திற்கனுகுணமாகப் பிரிட்டிஷ் சார்பு நாடுகளின் நிலைமை மாறிவிடுமென்றும் சொன்னார்.

## பிரிட்டிஷ் பொக்கிஷப் பத்திரங்கள்.

இங்கிலாந்து பாங்கியில் 100-க்கு 3 விகிதத்தில் வெளியிடப்பட்ட பொக்கிஷ பாண்டுகளுக்கு 120140000 பவுன் வரையில் மனுக்கள் வந்தன. 110000000 பவுனுக்கு டெண்டர்கள் அங்கீகரிக்கப்பட்டன. குறைந்த பக்ஷ விலையாகிய $97\frac{3}{4}$ பவுனுக்கு டெண்டர் அனுப்பியவர்களின் மனுக்கள் 100-க்கு 58 விகிதம் அங்கீகரிக்கப்பட்டன. அதற்கு மேற்பட்ட டெண்டர்கள் எல்லாம் முழுவதும் அங்கீகரிக்கப்பட்டன.

## இந்தியத் தொழிலாளர் நிலைமையைப்பற்றி மிஸ் பவர்.

விட்லி கமிஷனில் ஒரு அங்கத்தினராகவிருந்த மிஸ் பெரில் பவர் லண்டன் ராயல் ஸொஸைடியில் இந்தியத் தொழிலாளர் நிலைமையைப்பற்றி ஒரு பிரசங்கஞ் செய்தார். தொழிலாளரைச் சரிவர ஒருங்குப் படுத்தாதனால் ஏற்படும் கஷ்டங்களைப்பற்றி உடனே தகுந்த நடவடிக்கை யெடுத்துக் கொள்ளவேண்டுமென்றும், தொழிலாளர்கள் முற்றிலும் விஷயமறியாதவர்களாக விருப்பது இப்பொழுதுள்ள முக்கிய கைத்தொழில் தேசங்களில் இந்தியாவுக்கு ஒரு தனி நிலைமையை யுண்டுபண்ணியிருக்கிறதென்றும், தொழிற்சங்கத்தின் எதிர்காலம் நம்பிக்கையளிக்கக் கூடியதாக விருப்பினும், இதில் பல கஷ்டங்களிருக்கின்றன வென்றும், தொழிலாளர்களுக்குள்ளாகவே ஏற்படும் கஷ்டம்தான் எல்லாவற்றையும்விட மிக பெரியதாகவிருக்கிறதென்றும், ஜாதி மத வகுப்பு வரியாகத்தொழிலாளரிடையே பிரிவிருப்பதுதொழிலாளர் சார்பாக ஒன்றுபட்டுழைப்பதில் பெரிய தடையாகவிருக்கிறதென்றும், தொழிற்சங்கம் தொழிலாளருக்குத் துர்பலமாக வில்லாமல் பலமாகவிருக்கும்படிச் செய்வது மகத்தான வேலையாக விருக்கிறதென்றும், இங்கிலாந்தில் தொழிலாளருடைய வீட்டு வசதிகளைப் பார்த்தபின்னர் இந்தியத்தொழிலாளர் மிகுந்த கஷ்டத்துடன் சுகாதாரமற்ற அழுக்கடைந்த இடங்களில்குடியிருப்பதுபோல வேறெங்குமில்லை யெனக் கூறவேண்டுமென்றும், சொன்னார்.

ஸர் காம்பல் ரோட்ஸ் இக்கூட்டத்தில் தலைமைவகித்தார்.

## பிரஞ்சு பிரஸிடேண்டு சுட்டுக் கொல்லப்பட்டார்.

பிரான்ஸ் குடியரசுப் பிரஸிடெண்டான மான்ஷியர் டுமேர் இவ்வாரத்தில் மாஜி சிப்பாய்களின் காட்சியொன்றை பாரிஸில் திறந்து வைக்கச் சென்றபொழுது ருஷிய டாக்டரான உகுலாப் என்பவர் அவர் மீது மூன்று குண்டுகளைச் சுட்டார். டுமேர் உடனே ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்பட்டு சிகிச்சை செய்யப் பட்டும் இறந்து விட்டார். இந்த அதிக்ரமச் செய்கை பிரான்ஸெங்கும் மிகுந்த நடுக்கத்தையும் வருத்தத்தையுமுண்டு பண்ணிற்று. சுட்டவர் உடனே கைது செய்யப்பட்டார். ஸோவியத் ருஷியாமீது பிரான்ஸ் தக்க நடவடிக்கை யெடுத்துக்கொள்ளத் தவறியதற்காகப் பழிதீர்க்கும் உத்தேசத்துடன் தாம் சுட்டதாக அந்த டாக்டர் கூறினார். இவருக்குச் சித்தப் பிரமமென இப்பொழுது கூறப்படுகிறது. காலஞ்சென்ற பிரஸிடெண்டுக்கு இப்பொழுது வயது 75. பிரஞ்சு ஜனங்களால் வெகுவாக மதிக்கப்பட்ட சிறந்த தேச பக்தரும் ராஜதந்திரியுமாவார். பிரஸிடெண்டு டுமேருக்குப் பதில் ஸெனேட் சபைத் தலைவரான மிஸ்டர் லாபிரன் பிரஸிடெண்டாகத் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

# இந்திய வர்த்தமானம்

### சட்ட மறுப்பு இயக்கம்.

காங்கிரஸ் ஆக்டிங் தலைவராகவிருந்த மௌலானா அபுல் கலாம் அஸாத் காங்கிரஸ் நடவடிக்கைகளில் சேரக்கூடாதென்றும், உத்தரவின்றி டில்லியை விட்டு வெளியேறக் கூடாதென்ற நிபந்தனைகளுடன் டில்லி ஸெண்ட்ரல் ஜெயிலிலிருந்து விடுதலை செய்யப்பட்டார். பீஜப்பூர் சிறையிலிருந்து, விடுதலை செய்யப்பப்பட்ட டாக்டர் ஜீவராஜ மேத்தா, அன்றிரவே போலீஸார் முன் ஆஜர் செய்து கொள்ளாததால் கைது செய்யப்பட்டு 2 வருஷக் கடுங்காவல் தண்டனையும் ரூ 200 அபராதமும் விதிக்கப்பட்டார். சமீபத்தில் விடுதலை செய்யப்பட்ட மிஸ் ஸோபியா ஸோப்ஜி, தமக்கிடப்பட்ட உத்தரவை மீறி பம்பாய் நகருள் பிரவேசித்ததற்காகக் கைது செய்யப்பட்டு 1 வருஷ வெறுங்காவல் தண்டனை யடைந்தார்.

சென்ற வாரம் குறிப்பிட்டிருந்தபடி பம்பாயில் பங்கு பரிவர்த்தனை சங்க நிர்வாஹிகள் ராஜிநாமா விஷயமாக ஏற்பட்ட சச்சரவின் சம்பந்தமாக சங்க மெம்பர்கள் விசேஷக் கூட்டம்கூடி நிர்வாஹிகள் நடவடிக்கைகளை அங்கீகரித்து, அவர்களிடம் பூர்ண நம்பிக்கை யிருப்பதாகத் தீர்மானம் நிறைவேற்றியிருப்பதால் நிர்வாஹிகள் தங்கள் ராஜீநாமாவை வாபீஸ் வாங்கிக் கொள்வார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. பம்பாய் ஜெனரல் போஸ்டாபீஸ் மறியலில் சம்பந்தப்பட்ட ஒரு பிரபல தரகர் கைது செய்யப்பட்டதிலிருந்து பங்குத் தரகர்கள் ஹர்த்தால் அனுஷ்டித்தனர். கவர்ன்மெண்டார் இவ்வித ஹர்த்தாலை நிறுத்த கடுமையான முறைகளைக் கையாளுவார்கள் என்று எதிர் பார்க்கப்படுகிறது. காங்கிரஸிடம் மிகவும் அனுதாபமுள்ளவர்களைக் கண்டு பிடிக்க முயன்று வருகின்றனர். தங்க, வெள்ளி வியாபாரிகள் காங்கிரஸ் ஸ்தாபனங்களின் சொல்லை மீறி தங்கள் கடைகளைத் திறந்து வைப்பதாகவிருந்தால், அவர்களைப் பஹிஷ்கரிக்க வேண்டுமென்று சிலர் பயமுறுத்துவதாகவும், அவ்விதமாயின் அந்த வியாபாரிகளின் உரிமைகளைப் பாதுகாக்க தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவேண்டுமென்றும் இந்தவியாபாரிகளில் சட்ட மறுப்பு விஷயங்களில் உதவியோ அனுதாபமோ காட்டுபவர்களைப்பற்றி தகவல் தெரிவிக்க வேண்டுமென்றும், இவ்வியாபாரிகளுக்கு பஹிஷ்கார பயமுறுத்தல் அபராதம் முதலிய நிர்பந்தஉபத்திரவங்கள் செய்யப்படுமானால் அவர்களைப் பாதுகாக்க கவர்ன்மெண்டார் தயாரென்றும் தங்க, வெள்ளி வியாபார சங்கத்திற்கு தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

பம்பாயில் 'காந்தி கின்'ச் சம்பந்தமாக தபாலாபீஸ் ,ள் மறியல் செய்யப்பட்டு 35 காங்கிரஸ்காரர்களுக்கு மேல்



அஸ்ஸாம கவர்னராக நியமிக்கப்பட்டிருக்கும் ஸர். எம். கீன். S. P. B.



ஐரோப்பிய தட்டறியும் முறைகளில் பயிற்சிபெற இங்கிலாந்து செல்லும் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஸ்ரீயான் டி. எஸ் அத்து அய்யர் PPB

கைது செய்யப்பட்டனர். பல முக்கிய ஜவுளிக் கடைகள் மூடப்பட்டிருந்தன ஒரு கூலியாள் காங்கிரஸ் விளம்பரங்களை ஒட்டிக்கொண்டும், விநியோகித்துக்கொண்டும் போவதைக் கண்டு போலீஸார் அவனைக் கைது செய்து கேட்கவே, அவன் அந்த விளம்பரங்கள் சிகரெட் விளம்பரங்கள் என்று தான் எண்ணியதாகவும், அவைகளை ஒட்ட ஒரு ரூபாய் கூலி கொடுக்கப்பட்டதாகவும் கூறி, அவைகள் கொடுக்கப்பட்ட வீட்டைக் காண்பித்தான். அங்கு போலீஸார் 25000 விளம்பரங்களையும் புல்லடீன்களையும் கைப்பற்றினர்.

2-ந் தேதியன்று பம்பாயில் காங்கிரஸ் ஊழியர் ரகஸியக் காரியாலயம் ஒன்று கண்டு பிடிக்கப்பட்டது. அங்கு 940 ரூபாய் போலீஸாரால் கைப்பற்றப்பட்டது.

அலஹாபாதில் பண்டித மோதிலாலின் மாப்பிள்ளையான ஸ்ரீமான் ஆர். எஸ் பண்டிதர் உத்தரவு மீறி, டில்லிக் காங்கிரஸிற்குச்சென்றதற்காக 1வருஷக்கடுங்காவல் தண்டனையும், ரூ. 20 அபராதமும் விதிக்கப்பட்டார். கான்பூரில் ஒரு அந்நியத்துணி வியாபாரி ஆயுதபாணிகளால் தாக்கப்பட்டு காயமடைந்தார். தம்மைத் தாக்கியவர்கள் காங்கிரஸ்காரர்கள் என்று அவர் கூறுகிறார். முஸபர்பூரில் காங்கிரஸ் தபால்களை எடுத்துச்சென்ற ஒரு தொண்டருக்கு 6 மாதத் தண்டனை விதிக்கப்பட்டது. கல்கத்தாவில் இதுகாறும் கண்டுபிடிக்க முடியாமலிருந்த ஒரு ரகசிய காங்கிரஸ் விடுதி ஒரு வெற்றிலைத் தோட்டத்தில் கண்டு பிடிக்கப்பட்டது.

இந்தியாவின் இதர மாகாணங்களிலும் நகரங்களிலும் காங்கிரஸ் நடவடிக்கைகள் சம்பந்தமாகப் பல காங்கிரஸ் வாதிகள் கைது செய்யப்பட்டனர் தமிழ் நாட்டில் பல விடங்களில் இயக்க சம்பந்தமாகப் பலர் சிறைசென்றனர். கும்பகோணம் முனிஸிபாலிட்டியார் இந்திய சாமான்களுக்கே முதல் பாத்யதை காண்பித்து வாங்க வேண்டுமென்று ஏகமனதாகத் தீர்மானித்திருக்கின்றனர்.

ஸ்டேட்ஸ்மன் பத்திரிகை பின்வருமாறு தெரிவிக்கிறது. இப்போதையச் சட்ட மறுப்பு இயக்கம் ஆரம்பமான பிறகு எத்தனை பேர்களுக்குத் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறதென்று அடியில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. காவல் தண்டனையில்லாமல் அபராதம் மட்டில் விதிக்கப்பட்டவர்களும் விடுதலை யடைந்திருக்கிறவர்களும் இந்தத் தொகையில் சேர்ந்திருக்கிறார்கள்:—

| | |
|---|---|
| ஆஜ்மீர் மீர்வாரா | 175 |
| அஸ்ஸாம் ஏப்ரல் 23-வரை | 900 |
| பங்களூர் | 117 |
| வங்காளம் | 9151 |
| பீஹார்-ஒரிஸா (ஏப்ரல் 23-வரை) | 5987 |
| மத்திய மாகாணங்கள் | 2831 |
| குடகு | 86 |
| டில்லி | 1150 |
| சென்னை (ஜனவரி 1-முதல் ஏப்ரல் 16-வரை) | 1850 |
| எல்லைப்புற மாகாணங்கள் | 4524 |
| பஞ்சாப் | 1396 |
| ஐக்கிய மாகாணங்கள் | 8885 |
| பம்பாய் ஏப்ரல் 16வரை | 7534 |
| ஆக மொத்தம் | 43586 |

தேசீய வாரத்தில் கைதியானவர்கள் தொகையும் இதில் சேர்ந்திருக்கிறது. இத்தனை பேர்களும் இப்பொழுது சிறையிலிருந்து வரவில்லை. 9000 பேர்கள் போல் விடுதலை யடைந்திருக்கிறார்கள்.

---

### தபால் பெட்டிகளில் தீ.

தபால் பெட்டிகளில் எரியும் ரஸாயனப் பொருளைக் கொட்டி கடிதங்களை எரியவிடும் வழக்கம் வெகுதூரம் பரவியிருக்கிறது. சென்னை, மதுரை முதலிய விடங்களில் இவ்விதம் சில தடவை நடந்தது. காசியில் ஒரு தபால் பெட்டியே காணாமல் போய் விட்டது. டில்லி, லாகூர், காராச்சி, ஷிகார்பூர், நாகபுரி முதலிய விடங்களிலும் தபால் பெட்டிகளில் கடிதங்கள் சேதமடைந்திருந்தன. லாகூரில் தபாலாபீஸ் பெட்டிகளுக்குப் போலீஸ் காவலிருந்தபோதிலும் கூட கடிதங்கள் நாசமாக்கப்பட்டிருந்தன. பூனாவில் தபாலாபீஸ் மறியல் செய்த இருவர் 6 மாத தண்டனை யடைந்தனர். பெஷாவரிலும் தபால்களைக் கொளுத்தும் வழக்கம் பரவி யிருக்கிறது.

---

### வாலுடன் பிறந்த பெண்.

பழைய பாளத்தைச்சேர்ந்த சுரைக்காய்ப் பட்டியில் ஒரு ஸ்திரீ நான்கு குழந்தைகளை ஒரே சமயத்தில் பிரசவித்தாள். நான்கு குழந்தைகளும் தாயாரும் சௌகரியமாயிருக்கிறார்கள்.

ஆவாரம்பட்டியில் மற்றொரு ஸ்திரீக்கு ஒரு பெண் குழந்தை ½ அடி வாலோடு பிறந்தது. தாயார் இறந்துபோனாள். குழந்தை சௌக்கியமாயிருக்கிறது. குழந்தையின் வாலை ஆபரேஷன் செய்தும் வால் முளைத்துக் கொண்டிருக்கிறது.

---

டில்லிக்கும் சென்னைக்கும் டெலிபோன்.

மத்ய கவர்ன்மெண்டுக்கும் மற்ற மாகாணக் கவர்ன்மெண்டுகளுக்கும் டெலிபோன் மூலம் சமாச்சாரப் போக்குவரத்து நடத்த மாகாணத் தலைநகரங்கள் எல்லாவற்றிலும் அதற்கான கருவிகள் அமைக்க ஏற்பாடு செய்யும் திட்டங்கள் விசேஷமாகப் பூர்த்தியடைந்திருக்கின்றன. இவற்றில் சென்னைக்கும் டில்லிக்கும் டெலிபோன் போக்குவரத்து ஏற்படுத்துவது தான் பெரிய காரியம். இந்தியாவில் இவ்விரண்டு இடங்களுக்குமிடையில் உள்ள தூரம் தான் அதிகமாக விருக்கிறது. இதுவரையில் செய்துபார்த்த பரீக்ஷைகளிலிருந்து சீக்கிரத்தில் இம் முயற்சி பலிக்குமென நம்புவதற்கு இடமிருக்கிறது. பம்பாய், கல்கத்தா ஆகிய விடங்களிலிருந்து நேராகப் பேசியும், பரீக்ஷை பார்த்தாகிவிட்டது. இந்தியாவுக்கும் லண்டனுக்கும் டெலிபோன் வசதி ஏற்படுத்தவும் யோசனையிருப்பதாகத்தெரிகிறது.

---

மைமன்சிங்கில் சுழல்காற்று.

9-ந்தேதி மைமன்சிங் ஜெயிலின்மீது பலத்த மழையுடன்கூடிய சுழல்காற்று அடித்தது. இந்த ஜெயிலில் சாதாரணக் கைதிகளும் பந்தோபஸ்துக் கைதிகளுமாக 1200 பேருக்கு மேல் சிறை வைக்கப்பட்டிருந்தனர். ஜெயில் சுவர் ஏறக்குறைய தரைமட்டமாகிவிட்டது. இந்தச் சிறையின் மேற்கூரையில் பெரும் பாகம் சுழல்காற்றினால் அடித்துக்கொண்டு போகப்பட்டது. பல வார்டர்களும் கைதிகளும் இறந்து போய்விட்டதாகக் கூறப்படுகிறது. அவர்களது சவங்கள் இடிந்துவிழுந்த சுவரின்கீழ் அகப்பட்டுக் கொண்டிருப்பதாகவும் கூறப்படுகிறது. காயமடைந்தவர்களாயுள்ள கைதிகளும் வார்டர்களும் பலர் இருப்பதாகக் கூறப்படுகிறது. இன்னும் பலரது சரீரங்கள் புதையுண்டிருப்பதாகக் கூறப்படுகிறது. அருகிலுள்ள கிராமங்களிலும் பலத்த மழையுடன் கூடிய சுழல்காற்று அடித்து பலவீடுகளை நாசமாக்கி விட்டது. இவற்றிலும் பலர் இறந்திருக்கின்றனர். ஜெயில் கட்டடத்திலுள்ள இரும்பு விட்டங்களையும் செங்கல் சுவரின் பெரும் பகுதிகளையும் காற்று பெயர்த்து வெகு தூரத்திற்கப்பால் கொண்டுபோய் எறிந்திருக்கிறது. சிறைச்சாலைக்குப் பக்கத்திலுள்ள கிராமங்களில் வசிக்கும் கிராமவாசிகள், பல கைதிகள் சிறையை விட்டு வெளியே ஓடிவந்ததாகவும், ஆனால் பிறகு சிறைச்சாலைக்கே திரும்பிச் சென்று விட்டதாகவும் கூறுகின்றனர். புயலுக்குப்பின் பலத்த மழை பெய்தது. சிறைச்சாலையிலிருந்து ஒருமைல் தூரத்திலுள்ள நகரம் சிறிதும் பாதிக்கப்படவில்லை. ஜெயிலில் 20 பேர்களுடைய சவங்கள் அகப்பட்டன. இன்னும் பலர் இறந்திருப்பதாகத் தெரிகிறது. சுமார் 50 பேர்கள் காயமடைந்தனர். 4 பேர்கள் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லுகையில் இறந்துவிட்டனர். மொத்தம் 220 பேர்கள் ஜெயில் ஜாபிதா பெயர்கள் கூப்பிடப்பட்டபோது ஆஜராகவில்லை. 50 விசாரணைக் கைதிகளும் 100 கைதிகளும் தப்பிப் போய்விட்டதாகத் தெரிகிறது. காயமடைந்தவர்கள் நகர ஆஸ்பத்திரிக்குக் கொண்டுவரப்பட்டிருக்கின்றனர்.

---

ஹௌராவுக்கருகில் துப்பாக்கிப் பிரயோகம்

கல்கத்தாவிலிருந்து 5 மைல் தூரத்திலுள்ள கடம்டாலா (ஹௌரா ஜில்லா)வில் 8-ந் தேதி போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததினால் ஒருவர் கொல்லப்பட்டும் 2 பேர் காயப்பட்டும் போனார்கள். இரவு ஒரு கல்யாண ஊர்வலம் நடந்தது. இதனை வண்டிக்காரர்கள் தடுத்ததாகக் கூறப்படுகிறது. கல்யாண கோஷ்டியினருக்கும் ஏராளமாகக் கூடிய வண்டிக்காரர்களுக்கும் வாக்குவாதம் ஏற்பட்டது. இது சிறு சச்சரவாக முற்றியது. வண்டிக்காரர்கள் பயங்கரமான மனோபாவங் கொண்டனர். இதனால் ஊர்வலத்தில் முக்கிய புருஷராக இருந்த போலீஸ் இன்ஸ்பெக்டருடன் வந்த போலீஸ் பாராக்காரர்கள் சில குண்டுகளைப் பிரயோகித்தனர்.

---

மிர்ஸாப்பூர் கலவர வழக்கு.

ஒரு வருஷமாக விசாரணை நடந்துவந்த மிர்ஸாபூர் கலவர வழக்கில் 2-ந் தேதி செஷன்ஸ் ஜட்ஜினால் தீர்ப்புக் கூறப்பட்டது. 7 பேர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. 25 பேர்களுக்கு ஆயுள் பரியந்த தீவாந்தர சிட்சை விதிக்கப்பட்டது. 50 எதிரிகள் விடுவிக்கப்பட்டனர்.

---

15 ரூபாய்க் கடன் 72767 ஆக உயர்ந்தது.

தாங்கெயில் என்ற விடத்திலுள்ள பியாரி மோஹன்லால் என்பவர் உஷான்பக்கர் என்பவருக்கும் மற்றும் சிலருக்கும் 12 வருஷங்களுக்கு முன் மாதம் 100-க்கு 9-6-0 ரூபாய் வட்டி வீதம் 15 ரூபாய் கடன் கொடுத்திருந்தார். வட்டிக்கு வட்டியாகக் கணக்கிட்டு அவர் 72767 ரூபாய் கடனாகி விட்டதை எடுத்துக் காட்டி கடன்காரர்களிடமிருந்து 300ரூபாய் மட்டும் வசூலிக்க வழக்கு தொடுத்தார். முன்சீப் இவ் வழக்கில் சுமார் 60 ரூபாய்க்கு மட்டுமே டிகிரி கொடுத்தார். அவர் 15 ரூபாய்க்கு மாதம் நூற்றுக்கு 2 வீதம் வட்டி கணக்கிட்டு இவ்விதம் தீர்ப்பு சொன்னார்.

---

இடியால் 7 பேர் மாண்டனர்.

பரித்பூர் ஜில்லாவிலுள்ள முக்கியமான வியாபாரஸ்தலமான ஹாஜி கஞ்சிலும் அந்நகரிலிருந்து 7 மைல் சுற்றளவிலிருக்கும் கிராமங்களிலும் மழையுடன் கூடிய பெரும் சுழல் காற்று அடித்தது. கிரிக்கெட் பந்தின் அளவுள்ள பெரிய ஆலங்கட்டிகள் விழுந்தன. ஒரு விவசாயியின் வீட்டு முற்றத்தில் காலுதை பந்தைப்போன்று அவ்வளவு பெரியதாகவுள்ள ஆலங்கட்டிகள் விழுந்திருந்தன. இதைப்பார்க்க 11 பேரடங்கிய ஒரு குடும்பத்தார் வெளியே வந்தபோது இடி விழுந்தது. அதனால் 7 பேர் இறந்து விட்டனர். மற்றும் 4 பேர்கள் அபாயகரமான நிலைமையில் படுத்திருக்கின்றனர். கிராமவாசிகள் பலர் காயமடைந்திருக்கின்றனர். பல கால் நடைகள் இறந்து போயின. பல குடிசைகள் தரையோடு தரையாகின. வீட்டுக்கூரைகள் அடித்துக் கொண்டு போகப்பட்டன. கழனிகளிலிருந்து பல பயிர்களுக்குச் சேதம்.

வங்காளம் அஸ்ஸாம் ஆகிய மாகாணங்களில் பல விடங்களில் மழையுடன் கூடியபுயல், பெரும் சேதத்தை உண்டாக்கியதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. குல்னா கிராமங்களில் 10 முதல் 15 பேர் வரை இறந்து விட்டனர். பலர் காணப்படவில்லை. 100 பேருக்குக் காயம். புயலினால் ஒரு புளியமரம் வேரற்று தூப்ரி முனிஸிபல் ஆபீஸ் கட்டடத்தின் மீது விழுந்தது. இதனால் அக்கட்டடம் இடிந்து நாசமாகி விட்டது அலஹாபாத் ஜில்லாவில் 5-ந்தேதி அடித்த புயலால் பலத்த சேதமேற்பட்டது. 13 பேர்கள் மாண்டனர். 125 பேர்கள் காயமடைந்தனர்.

---

கொள்ளைக்காரரின் கொடுமை.

பங்கூராவில் ஈட்டிகள் முதலிய பல கூரிய ஆயுதங்களுடனும் மின்சாரக் கைவிளக்குகளுடனும் வந்த 25 கொள்ளைக்காரர்கள் பிரஜோபூனி என்பவரது வீட்டிற்குள் நுழைந்தார்கள். வீட்டிலிருந்தவர்கள் தாக்கப்பட்டனர். பெட்டிகள் உடைக்கப்பட்டு அவற்றிலிருந்தவை கண்டபடி வாரி- யிறைக்கப் பட்டன. சற்று எதிர்த்தாலும் அதனைக் கொள்ளைக்காரர் வெறுத்தனர். வீட்டுக்காரரது தாய் தலையிட்டபோது அவளது மார்பில் கொள்ளைக் காரர் அடித்ததினால் அவள் மூர்ச்சையுற்றாள். இவளது இளைய குமாரன் ஆத்திரத்தில் ஒரு கொள்ளைக்காரனை இரும்புக் கழியால் அடித்தான். இதற்காக அவனை மற்றொரு கொள்ளைக்காரன் ஈட்டியால் குத்தி விட்டான். பெட்டிகளிலிருந்தவற்றை எடுத்துக் கொண்ட பிறகு கொள்ளைக்காரர்கள் ஸ்திரீகள் அணிந்திருந்த நகைகளைப் பலாத்காரமாகப் பறிக்க ஆரம்பித்தனர். இதனால் ஸ்திரீகளது சரீரத்திலிருந்து ரத்தம் கொட்டியது. இவ்வாறு வீட்டில் நடக்கையில் கொள்ளைக்காரரது கண்ணில் படாது தப்பிய இந்த வீட்டுக்காருடைய பெண், காம்பவுண்டு சுவரை ஏறிக்குதித்து அக்கம் பக்கத்தில் வாழ்பவர்களை உதவிக்கு அழைத்து வந்தாள். ஆனால் வெளியில் காவல் புரிந்த கொள்ளைக்காரர்கள் இவர்களைத் தடுத்தனர். மற்ற கிராம வாசிகள் வருமுன்பு கொள்ளைக்காரர்கள் கிடைத்தவற்றை எடுத்துக்கொண்டு தப்பி ஓடிவிட்டனர்.

பிரஜோவின் தாயாரும் அவரது இளைய சகோதரரும் மற்றொருவரும் ஆஸ்பத்திரியில் மிக்க அபாயகரமான நிலைமையில் கிடக்கின்றனர்.

---

பட்டினியால் மாண்ட இரட்டைக் குழந்தைகள்.

அம்பாலா ஜில்லாவில் ஒரு கிராமத்தில் ஒரு வாலிப ஸ்திரீக்கு இரட்டைக் குழந்தைகள் பிறந்தன. அவள் பிரசவித்த 15 நாட்களுக்கெல்லாம் துணி தோய்ப்பதற்காக தனது இரட்டைக் குழந்தைகளையும் உடன் எடுத்துக் கொண்டு குளத்திற்குச் சென்றாள். அங்கு அவள் தனது குழந்தைகளை ஒரு மா நிழலில் படுக்க வைத்துவிட்டு, சில கெஜ தூரத்திலிருந்த குளத்தில் துணியைத் தோய்த்துக்கொண்டிருந்தாள். துணியைத் தோய்த்துக்கொண்டிருக்கையில் அவளை யாரோ அடையாளந் தெரியாத சிலர் பலாத்காரமாகத் தூக்கிப் போய்விட்டார்கள். அவர்கள் இக்குழந்தைகளை விட்டுவிட்டுப் போய்விட்டனர். 2 தினங்களுக்குப் பிறகு குழந்தைகள் இறந்து கிடக்கக் காணப்பட்டன. கிராம ஆஸ்பத்திரியில் அவை பட்டினியால் இறந்து விட்டதாகக் கண்டுபிடிக்கப்பட்டது.

---

# விநோதத் சொத்து

கிராமத் தெருவில் பகலிலேயே வேலைக்காரன் விளக்கேற்றினன்.

கிராமவாஸி:—எதற்காக இப்பொழுதே விளக்கேற்றினாய்?

வேலைக்காரன்:— பொழுது போனவுடன் ஏற்றினல் பிரயோஜனப்படாது. அதற்குள் எல்லோரும் படுத்துத் தூங்கிக்கொண்டிருப்பார்கள்.

———

கணவன், 'என் மனைவி தடுக்கி விழுந்து இரண்டு பெரிய பாறைகளின் நடுவில் அகப்பட்டுக் கொண்டு விட்டாள். அவளை விடுவிக்க முடியவில்லை. என்ன செய்யலாம்?'

வேலையாள்:— அதற்காகக் கவலைப்பட வேண்டாம். நான் வெடி மருந்து வைத்துப் பாறைகளைத் தகர்த்தெறிந்து விடுகிறேன்.

———

சாமான் வாங்க வந்தவர்:— உன் கடையில் கிடைக்கக் கூடிய சாமானைத் தான் நான் வாங்க வேண்டுமா; என்ன? நான் மாட்டேன்!

கடைக்காரன்:— அது வாஸ்தவந்தான். ஆனல் என்னிடம் கிடைக்கக் கூடாத சாமான்களை நான் எப்படிக் கொடுப்பது?

———

யாத்ரீகன்:—நாளை சமுத்திரத்தில் நீச்சல் கற்றுக் கொள்ளலாமென்று ஆலோசித்திருக்கிறேன். ஏதாவது முன்னேற்பாடுகள் செய்ய வேண்டுமா?

சாப்பாடு ஹோட்டல்காரன்:—எனக்குச் சேர வேண்டிய பணத்தை முன்னதாகவே கொடுத்துவிட்டுப் போ.

———

கணவன்:—இன்று சாம்பார் நன்ருக விருந்தது. சாம்பார் இவ்விதம் தயாரிக்க எங்கு கற்றுக் கொண்டாய்?

மனைவி:—ராமாயண காலக்ஷேபத்திற்காகப் போயிருந்தபோது என் பக்கத்திலிருந்த ஒருவள் அவளுடைய சிநேகிதியிடம் இந்த முறையைச் சொல்லிக் கொண்டிருந்தாள்?

———

மனைவி:—இப்பொழுது எங்கு செல்கிறீர்? எப்பொழுதும் வெளியில் சென்று பணத்தைத் தாறுமாருகச் செலவழித்து விடுகிறீர்களே. உங்களுக்கு வேண்டியதை நான் செய்து வருகிறேன்.

கணவன்:— சந்தோஷம், கிராப் செய்து கொள்ளவும் முக க்ஷவரம் செய்து கொள்ளவுந்தான் வெளிக் கிளம்பினேன்.

———

வாடிக்கைக்காரன்:— உங்களுக்குச் சேர வேண்டிய தொகையை வெகு நாளாக—.

கடைக்காரன்:— ஆமாம். வெகு நாளாகத்தான் பாக்கி வைத்திருக்கிறீர்கள்.

வாடிக்கைக்காரன்:— கொடுக்காமலிருப்பதற்காக மன்னிப்புக் கேட்டுக் கொள்ளவே நான் வந்தேன்.

———

கணவன் இரவு மூன்று மணிக்கு வீடுவந்து சேர்ந்தான். அவன் மனைவி மெத்தை மேலிருந்தபடியே மிகவும் கோபத்துடன், மணி என்ன என்று கேட்டாள். அப்பொழுதுதான் கீழேயிருந்த கெடியாரம் மூன்றடிக்கவாரம்பித்தது. கணவன், வெகு சாவதானமாக, மூன்றடித்தவுடன், கெடியார முள்ளைத் திருப்பி, அடுத்தடுத்து நாலும், ஐந்தும் அடிக்கும் படியாகச் செய்து "மணி இப்பொழுது தான் பன்னிரண்டாயிற்று" என்ருன்.

———

முதல்நண்பன்:-கல்யாணமென்ருல்வன் இப்படி நடுங்குகிருய்?

இரண்டாவது நண்பன்:— இதற்குமுன் கல்யாணம் செய்து கொண்ட அனுபவமில்லாததால்.

முதல் நண்பன்:—அது நன்ருகத் தெரிகிறது. அனுபமிருந்தால் இன்னும் அதிகமாக நடுங்கியிருப்பாய்.

———

படைத் தலைவன்:—முட்டாளே, நான் உத்தரவு கொடுக்குமுன் யார் துப்பாக்கியைப் பிரயோகிக்கும்படியாகச் சொன்னது. என்னைச் சுட்டுக் கொன்றிருப்பாயே. சற்று குறிதப்பியது.

படையாள்:— இனிமேல் குறிதவருமல் சுடுகிறேன்.

———

வம்பன்:—எனது மோட்டார் வண்டியில் ஒரு தடவை பிரயாணம் செய்கையில், மனித சஞ்சாரமில்லாத ஒரு நடுக்காட்டில் என்வண்டி தீப்பற்றி எரிய வாரம்பித்தது. நான் என்ன செய்தேனென்று நினைக்கிருய்?

குறும்பன்:—ஊதி ஊதி அணைத்திருப்பாய்.

———

முதல் நண்பன்:—கல்யாணமாவதற்கு முன் ஒரு கிளி வைத்திருந்தாயே. அது எங்கே?

இரண்டாவது நண்பன்:— மனமுடைந்து இறந்தது.

முதல் நண்பன்:—ஏன்?

இரண்டாவது நண்பன்:— கல்யாணமான பிறகு அதனுடைய வேலையை நான் எடுத்துக்கொண்டு விட்டதால் போட்டி சகிக்காமல் இறந்தது.

———

கணவன்:—காலமே கெட்டுக் கிடக்கிறது. ஒரு தேசமும் நல்ல ஸ்திதியிலில்லை. ஒரு தேசமும் தான் இதர தேசங்களுக்குக் கொடுக்க வேண்டிய கடன்களைக் கொடுக்கவில்லை.

மனைவி:—ஆமாம். வீட்டுக்குச் சாமான் வாங்கிய தொகைகள்கூடத்தான் கொடுபடவில்லை.

———

மனைவி:—இந்த சுருட்டுப் பிடிக்கும் வழக்கத்தை விட்டுவிடுங்கள்.

கணவன்:—எதற்காகவோ. மேல் நாட்டில் பெரிய நிபுணர்களெல்லாம் சுருட்டுப் பிடிக்கிருர்களே.

மனைவி:—நீங்களும் பெரிய நிபுணனுகும் வரையிலாவது நிறுத்தி வையுங்கள்.

———

ராமு:—என் குடையைக் காணும்.

போலீஸ்காரன்:—அது எந்த மாதிரிக் குடை.

ராமு:—நான் சரியாகக் கவனிக்கவில்லை. நேற்றுதான் ஒரு ஹோட்டலிலிருந்து எடுத்து வந்தேன்.

———

சிறுவன்:—அப்பா, மிருகக்காக்ஷிச் சாலைக்குப் போய் குரங்குகளைப் பார்த்து வர வேண்டும்.

தந்தை:—நமது பந்துக்களெல்லாம் இங்கு வந்திருக்கையில் குரங்குகளைப் பார்க்க மிருகக் காட்சி சாலைக்குப் போகவேண்டுமென்கிருயே."

———

சீனு பணத்திற்காசைப்பட்டு ஒரு பணக்காரனுடைய குரூபியான பெண்ணை மணந்தான. இரண்டுநாள் கழித்து அவனுக்கு ஒரு லாட்டரியில் முதல் பரிசு கிடைத்தது. சீனு தன் நண்பனெருவனைச் சந்தித்து சமாசாரத்தைக் கூறினன்.

நண்பன்:—அடடா. இரண்டு நாள் முன்னதாகவே இந்தலாட்டரிச் சீட்டு கிடைத்திருக்கக் கூடாதா?



காக்ஷி—காபி ஹோட்டல் முதலாளி:—இவர் கணக்கு என்னடா?
பையன்:—டிபன் 8 அணு. நாற்கலி 5 ரூபாய்கள்.
ஆகமொத்தம் $5\frac{1}{2}$ ரூபாய்.

நமது சிறு கதை.

# மோஹனலால் கம்பெனி

(ஸ்ரீமான் ஜனரத்னம் எழுதியது.)

ஒரு நாள் மாலை 4 மணி இருக்கும். துப்பு அறியும் நிபுணர் ராவுண்ணி நாயர் மூர்மார்கட் சமீபம் வரிசையாகச் செல்லும் மோட்டார் கார்களையும், கூட்டமாகச் செல்லும் பல மனிதர்களையும் பார்த்து நின்றார். திடீரென்று யாரோ ஒருவன் அவர் மீது மோதினான். "என்னை மன்னிக்க வேண்டும்!' என்று முணுமுணுத்தான். "பாதகமில்லை. என் கடியாரம் பத்து நிமிஷம் வேகமாகச்செல்கிறது. அதோ பார்! ரிப்பன் பில்டிங் கோபுர கடியாரத்தை!" என்று சொல்லிக் கொண்டே நாயர் அந்த ஆள் ஜேபியில் கையை விட்டு அதில் இருந்த சாமான்களை எடுத்து தன் ஜேபியில் போட்டுக் கொண்டார். அந்த ஆள் ஸ்தம்பித்து நின்றுவிட்டான். "பம்பாயிலிருந்து இவ்விடம் வந்து எவ்வளவு நாட்களாகின்றன? மஹாபிர்சிங் சுகமா?' என்றார் நாயர். அந்த ஆள் முகம் வெளுத்து பீதியடைந்து ஓட்டம் பிடித்தான். நாயர் புன்சிரிப்புடன் திரும்பி விக்டோரியா ஹாலுக்குச் சென்றார்.



பொம்பூரில் 'இந்திய சாமான் பிரசார சபையின்' ஆதரவில் திவான் பகதூர் ஆரோக்கியசாமி முதலியாரால் ஸ்வதேசி ஸ்டோர் திறந்து வைக்கப்பட்டபோது எடுத்த படம். PPB

சில நாட்களுக்குப் பிறகு சிந்தாத்திரிப்பேட்டை வழியே டிராமில் சென்று கொண்டிருந்த நாயர் திடீரென்று கீழே இறங்கி, வந்த வழியே திரும்பி நடந்தார். பெரியமாடி வீடு ஒன்று முன் ஒரு மோட்டார்கார் நின்றிருந்தது. வீட்டின்முகட்டில் 'மோஹன்லால் கம்பெனி" என்று போர்டு காணப்பட்டது. ஏதோ சந்தேகம் கொண்ட நாயர் எதிர் வீட்டில் இருந்து கொண்டு கவனித்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் இன்னொரு மோட்டார் வந்தது. அதிலிருந்து ஒரு வாலிபர் இறங்கி உள்ளே சென்றார்.

"வாருங்கள் பத்மநாப ரெட்டியாரே! இப்போது தான் நமது நண்பர் தாங்கள் வருவதாகச் சொன்னார்" என்று ஒரு யுவர் வரவேற்றார். அவர் தான் மோஹன்லால். பத்மநாப ரெட்டியார் சேந்தமங்கலம் மிட்டாதார். அவருக்கு எவ்விதத்திலாவது தன்னுடைய நிலத்தில் சவான்கள் விளையவேண்டுமென்று ஆசை. அவர் தகப்பனார் வெகு திறமையாக வாழ்ந்து வந்தபடியால் மிட்டா சொத்து ஒன்றுக்குப் பத்தாக வளர்ந்தது. அப்பணத்தையெல்லாம் பிள்ளை சென்னை பாங்கியில் கொணர்ந்து சேர்த்தார். எல்லாமாக 21 லட்ச ரூபாய்கள் பாங்கியில் இருந்தன. எங்கேயோ தங்கச்சுரங்கம் இருப்பதாகவும், அதை வாங்க ஏற்பாடு செய்து வருவதால் பணத்தை தேவையானபோது பெருந்தொகையை எடுக்க வசதியாக வைத்திருந்தார். இவ்விஷயங்களையெல்லாம் அறிந்து மோஹன்லால் தக்கஏற்பாடுகள் செய்தான். ரெட்டியார்முன் மேஜை மீது பளபளப்பான மஞ்சள் கோடுகள் பெற்ற கல் கட்டிகள் சில இருந்தன. மோஹன்லால் ஒரு கல்லை எடுத்து "இந்தக் கல்தான் நமது நீலகிரியிலிருந்து எடுக்கப்பட்டது. அது கோலார் சுரங்கத்திய கட்டி. இன்னொன்று கோல்கொண்டாவிலிருந்து வந்தது." என்று விபரமாகச் சொன்னார். அவருடன் இருந்த தனபால் செட்டியார், "இந்த நீலகிரிச் சுரங்கத்தை இன்னும் ஆரம்பிக்கவில்லை. முதலில் பரீட்சை செய்து பார்த்தோம். பாறையில் தங்கம் எவ்வளவு பர்செண்டு என்று கணக்கெடுத்தோம். நிலத்தின் சொந்தக்காராகிய வக்கீல் சிங்காரம் தன்னையும் ஒரு டைரெக்டராகச்சேர்த்துக் கொள்ளவேண்டுமென்கிறார். நாம் இந்தச் சுரங்கத்தை ஏற்றுக்கொண்டு வேலை தொடங்கத் தாமதித்தால் சில இங்கிலீஷ்காரர் லாவகமாக அடித்துக்கொண்டு போய்விடுவார்கள்" என்றார்.

"உங்கள் கம்பெனி விஷயத்தைப் பற்றிப் பூராவாகவும் தெரிந்துகொண்டு பிறகுதான் என் முதல் கொடுப்பேன்" என்று ரெட்டியார் கூறினார்.

"ஐயா! உங்கள் முதல் வேண்டுமென்று நாங்கள் விரும்பவில்லை. நீங்கள்தான் எங்கள் கம்பெனியைப்பற்றிக் கேள்விப்பட்டுத் தேடி வந்தீர்கள். தங்கச் சுரங்கத்திற்கு வேண்டிய முதல் எங்கள் வசம் சேர்ந்துவிட்டது. எங்கள் கம்பெனி வியாபாரம் லட்சக்கணக்கு மாத்திரம் அல்ல. கோடிக்கணக்கில் நடைபெறும். இதோ பாருங்கள்!" என்று பக்கத்திலிருந்த இரும்புப் பெட்டியைத் திறந்து ஒரு வெல்வெட் தைத்த சிறு பெட்டியைத் திறந்து காட்டினார். அதில் கண்ணைக் கூசும்படியான டால் வீசும் பல வைரக் கற்கள் இருந்தன. சில பச்சை, சிகப்பு கற்களும் இருந்தன. ரெட்டியார் கண்களைக் கசக்கிக் கொண்டு திரும்பவும் பார்த்தார்.

"ஏன் மயங்குகிறீர், இதோ எடுத்துப்பாரும்!" என்று லால் அலட்சியமாக நாலு கற்களை எடுத்து ரெட்டியார் கையில் கொடுத்தான். ரெட்டியார் கல்பரிட்சையில் கெட்டிக்காரர் என்று சொல்லிக் கொள்வார். அக்கற்கள் உண்மையில் உயர்ந்தன வென்று அறிந்தார். "என்ன, மோஹன்! இவைகளை இன்னும் அனுப்பாமல் வைத்திருக்கிறாயே." என்றான் தனபால். "இன்ஷியூர் செய்து அனுப்புவதா? ஆள்வசம் அனுப்புவதா என்று யோசனை செய்து கொண்டிருக்கிறேன்." "யாருக்கு?" என்றார் ரெட்டியார்.

"சிங்கப்பூரிலிருந்து எங்கள் ஏஜெண்டு கொண்டுவந்தார். பாரிஸில் ஒரு கம்பெனியில் கேட்டார்கள். இந்த போகத்தில் எங்கள் கமிஷன் ஐம்பதினாயிரம் ரூபாய். இம்மாதிரி பல போகங்கள்!" என்று நகைத்தான் மோஹன்லால். "நீங்கள் விற்காமலிருந்தால் நான் வாங்கலாம் என நினைத்தேன்."

"அப்படி உங்களுக்கு அவசியமானால் அடுத்த சனிக்கிழமை என் பங்களாவிற்கு வாருங்கள். இன்னொரு போகம் செய்யலாம்."

"எங்கே உமது பங்களா?"

"மீனம்பாக்கத்தில் இருக்கிறேன். சனிக்கிழமை இரவு போஜனத்திற்கே வந்து விட்டால் எல்லாவற்றையும் சாவதானமாகப் பேசலாம்"

"ரொம்ப சந்தோஷம்" என்று ரெட்டியார் எழுந்தார். அவரை வெளியே கொணர்ந்து விட்டு மற்ற இருவரும் உள்ளே சென்றனர்

எதிர் வீட்டிலிருந்த நாயர் முன்னதாக சந்துக் கோடியில் சென்று கார் திரும்பும்போது ரெட்டியாரிடம் பேசும் பொருட்டு நின்றிருந்தார். கார் திரும்பும்போது, "தாங்கள் தான் சேந்த மங்கலம் ஜமீன்தார் அவர்களா?" என்று மரியாதையாக வினவினார். "ஏதாவது பேசவேண்டுமென்றால் பங்களாவிற்கு வரவேண்டும். இங்கே தெருவில் பேசாதே" என்று கடிந்து சொல்லிவிட்டு காரை வேகமாக விட்டுக் கொண்டுசென்றார் ரெட்டியார்.

அடுத்த சனிக்கிழமை இரவு பத்துமணி இருக்கும். மீனம்பாக்கத்தில் ஒரு சிறிய பங்களாவின் ஹாலில் சுகமாக சாப்பிட்டுவிட்டு மோஹன்லாலும் பத்மநாபரெட்டியாரும் வெற்றிலை மென்று கொண்டே பேசிக்கொண்டிருந்தனர். மேசைமீது விஸ்கி பாட்டிலும் இரண்டு கிளாஸ் டம்ளர்களும் இருந்தன. பத்மநாபரெட்டி கையில் ஒரு காகிதத்தில் சில வைரக் கற்களை வைத்துக்கொண்டு பார்த்திருந்தான். பெட்ரோமாக்ஸ் வெளிச்சத்தில் அவை ஜ்வலித்தன. "இன்று வந்த ஏஜெண்டு இவ்வளவுதான் கொணர்ந்தான். கல்கத்தாவில் ஜமீன்தார் முக்கர்ஜி இன்சால்வெண்டு ஆகிவிட்டதால் ஏலத்தில் இக்கற்கள் கிடைத்தன. இவைகளினால் எங்களுக்கு பதினாயிரம கமிஷன் கிடைக்கும். உங்களுக்காக ஐயாயிரம் விட்டுக்கொடுக்கிறேன்" என்றான் மோஹன்லால்.

"விலையும் கமிஷனுமாக எவ்வளவு?"

"ஐம்பத்து ஐயாயிரம் ரூபாய்."

"சரி! இதோ செக் கொடுக்கிறேன்" என்று பத்மநாபரெட்டி செக் புத்தகமும் பேனாவும் எடுத்தான்.

"செக்கா? எங்கள் கம்பெனி சென்னையில் புதியது. ஆயினும் பாதகமில்லை" என்று மெதுவாகச் சொல்லிக்கொண்டான்.

"ஒருவிதக் கஷ்டமுமில்லை. நான் ஒரு லெட்டரும் தருகிறேன்" என்று ரெட்டியார் நேஷனல் பாங்கிக்கு ஒரு செக்கும் ஏஜெண்டுக்கு ஒரு கடிதமும் எழுதிக்கொடுத்தார். பிறகு இருவரும் கொஞ்சம் விஸ்கி சாப்பிட்டார்கள். அப்பொழுது விர்ரென்று சப்தம் கேட்டது. இரு

(458-ம் பக்கம் பார்க்க.)

# ஹைதர் அலி

(ஸ்ரீமான் என். கே. அய்யர் எழுதியது.)

[இப்பகுதியில் ஹைதர் அலி தன் ராஜ்யத்தின் நாலா பக்கங்களிலும் சண்டை தொடங்கி, வென்று, அதை மிகவும் விசாலமாக்கியது மல்லாமல், ஆங்கிலேயருடன் நடத்திய சண்டைகளில் ஜெயமடைந்து, தென்னாட்டில் மிகவும் பலம் வாய்ந்ததொரு ராஜ்யத்தைத் தன் மரண காலத்தில் மகன் டிப்புவுக்கு ஒப்புவித்த விவரங்களைக் காணலாம்.]

தென்னாட்டின் நிலைமை.

ஹைதர் காலத்தில் தென்னாட்டின் நிலைமை, மிகவும் குழப்பமாயிருந்தது. மராட்டியர் இந்தியா முழுவதையும் தம் கைவசப்படுத்திவிடலாம் என்று வெகுகாலமாக எண்ணியிருந்தது, பாணிப்பட்டில் அப்போது தான் மண்ணாயிற்று. அதன் பிறகு, அவர்கள் தம் கவனத்தை மிகவும் தீவிரமாகத் தென்னாட்டில் செலுத்தி, அடிக்கடி ஹைதராபாத் நிஜாமுடன் சண்டை நடத்தி வந்தார்கள். இதல்லாமலும், தென்னாட்டிலிருந்த ராஜ்யங்களினுள் நுழைந்து சவுத்வரியையும் வசூலித்து வந்தார்கள். மராட்டியரது நடவடிக்கை தென்னாட்டில் அரசு செலுத்திய ஒவ்வொருவர் மனதிலும் மிகுந்த பீதியை உண்டாக்கி வந்தது. மராட்டியர் பயம் இல்லாதபோது, ஆற்காட்டு நவாப், தமிழ் தேசத்தின் வட பகுதியின் மீது அதிகாரஞ் செலுத்திவந்தார். இத்துடன் ஆங்கிலேயரும், பிரஞ்சுக்காரரும் ஒருவருடனொருவர் இடைவிடாமல் சண்டை செய்துவந்தார்கள்.

ஹைதர் படையெடுப்பு.

இந்நிலைமையில் வீரமும், சக்தியும் வாய்ந்த எவருக்கும், ஒரு ராஜ்யத்தை ஸ்தாபித்துக்கொள்ளலாம் என்ற நம்பிக்கையிருந்தது. ஹைதர், இச்சந்தர்ப்பத்தைச் சும்மா விடவில்லை. மைசூரில் தன் சக்தியை ஸ்திரமாக நிலைக்கச் செய்தவுடன், அவர் சுற்றுப்புறங்களிலிருந்த சிறு ராஜ்யங்களைத் தாக்க வாரம்பித்தார். 1762ம் வருஷத்தில் ஸீரா என்னும் சிறு பிரதேசம் அவர் வசமாயிற்று. அது நிஜாம் மன்னரின் ஆதினத்திலிருந்தது ஹைதரை எதிர்த்துச்சண்டை செய்ய, அவர் துணியவில்லை. 1763-ல் ஹைதர், பிதனூர என்னும் இடத்தைத் தாக்கினார். அங்கு அதிகாரம் வகித்து வந்த வீரம்மாஜி என்னும் வீரமாது, ஹைதரை எதிர்த்துத் தன்னால் கூடிய வரைக்கும் சண்டை செய்து விட்டு, இறுதியில் முடியாமல், வல்லாளராயன் துர்க்கத்தில் ஓடி ஒளிந்து கொண்டாள். ஆனால், பிதனூரில் அவருக்கு ஏராளமான தனம் கிடைத்தது. அவ்வரசும் அவரதாயிற்று. பிறகு ஹைதர் கொஞ்சங்கொஞ்சமாக, பஸவராஜ துர்க்கம், ஹொன்னவரம், மங்களூர், முதலிய விடங்களைக் கைப்பற்றிக்கொண்டார். வல்லாளராயன் துர்க்கமும் அவர் கைவசமாயிற்று. இவ்வாறு மேற்குக் கடலோரம் முழுவதையும் அவர் வென்று, தன் ராஜ்யத்துடன் சேர்த்துக்கொண்டார். கடலோரத்தின் பிரயோசனத்தை அவர் நன்றாயறிந்ததனால், அவர் சில படைக்கப்பல்களையும் கட்டுவித்தார். அதற்காக லத்தீப் அலிபேக் என்ற ஒரு கப்பல் நிர்மாணிப்பவரை உயர்ந்த சம்பளத்தில் நியமித்தார். இச்சமயத்தில் ஸவனூர் நவாப், ஹைதரிடம் பயங்கொண்டு அவருக்கு இரண்டு லட்சம் ரூபாய் கப்பங்கட்டி வருவதாகச் சம்மதித்து, தார்வாட் பிரதேசத்தையும் அவருக்குக் கொடுத்தார்.



இங்கிலாந்தில் ஆத்ம ஞானம் போதிப்பதற்காகச் சென்றிருக்கும் ஸ்ரீ மேஹர் பாபுவும் அவருடைய சில ஆங்கிலச் சிஷ்யர்களும்.

மலையாளத்தில் ஹைதர்.

ஹைதருக்கு மேற்குக் கடலோரப் பிரதேசங்கள் கிடைத்ததிலிருந்து, கண்ணனூரில் ஆண்டு வந்த மாப்பிள்ளை வகுப்பாரது தலைவர், அள்ளிராஜா அவருக்குச் சிநேகமானார். அவருடன் சேர்ந்து, ஹைதர் மலையாளப் பிரதேசத்தின்மீது படையெடுத்துச் சென்றார். இதில் மிகவும் கடுமையான யுத்தம் நடந்தது. ஆயிரக்கணக்கான ஜனங்கள் மாண்டார்கள். கள்ளிக்கோட்டை தாமோதரி மன்னர், ஹைதரை எதிர்க்க முடியாமலும், அவருக்குக் கீழ்ப்படிந்திருக்கச் சம்மதமில்லாமலும், தற்கொலை புரிந்து மரித்தார். ஆனால் கொச்சி, பாலக்காடு இவ்விரு விடங்களின் அரசர்கள், ஹைதருக்குக் கீழ்ப்படிந்தார்கள். இப்போது குடகும் ஹைதர் வசமாயிற்று.

மராட்டியரிடம் தோல்வி.

ஹைதரது சக்தி மேன் மேலும் பெருகி வருவதைக்காண மராட்டியருக்கும் பிடிக்கவில்லை. சிக்கிரத்தில் தமக்கு ஹைதரால் ஆபத்து விளையக் கூடும் என்று கருதி, அவர்கள் ஹைதரை இப்போதே அழித்து விடத் தீர்மானித்தார்கள். ஸீரா ஸவனூர் இவ்விரண்டு விடங்களின்மீது, ஹைதர் தன் ஆதீனத்தை ஸ்தாபித்தது, முக்கியமாக அவர்களுக்குக் கோபத்தை யுண்டாக்கியது. ஹைதரும், அச்சமயத்தில் மராட்டியரை எதிர்த்துப் போராடத் துணியவில்லை. ஆதலால் அவர் அவர்களைச் சமாதானஞ் செய்யவெண்ணி, பேஷ்வா மாதவராவுக்கு மிகவும் விலையுயர்ந்த காணிக்கைகளை யனுப்பினார். ஆனால் பேஷ்வா அவைகளை அங்கீகரிக்காமல், தன் படைகளை ஹைதருக்கெதிராக அனுப்பினார். ஹைதரும் வேறு வழியில்லாமல், மராட்டியப் படைகளைச் சந்திக்கப் புறப்பட்டார். இரு பட்டைகளும் ரத்னஹள்ளி என்னுமிடத்தில் கூடின. ஆனால் ஹைதர் இதில் தோல்வியடைந்தார். சண்டை நீடித்து நடத்தவும் அவருக்கு விருப்பமில்லை. ஆதலால் அவர் எற்கனவே பிடித்திருந்த குத்திப் பிரதேசத்தைத் திருப்பிக் கொடுப்பதாகவும், சண்டைச் செலவுக்காக மராட்டியருக்கு முப்பது லட்சம் ரூபாய் கொடுப்பதாகவும் சம்மதித்து, சமாதானஞ் செய்து கொண்டு திரும்பினார்.

ஆங்கிலேயருடன் சண்டை.

ஹைதர், மைசூர் படைகளின் சேனாதிபதியாயிருந்ததிலிருந்தே, ஐரோப்பியர்களுடன் அவருக்குப் பழக்கமுண்டு. முன் ஆற்காடு நவாப் பதவிக்காகச் சண்டை நடந்தபோது, மைசூர் படைகள், சந்தாஸாஹிப், பிரஞ்சுக்காரர் இவ்விருவர்களுடைய சகாயத்திற்காக அனுப்பப்பட்டன. அப்போது ஹைதர் ஐரோப்பியரது யுத்த முறைகளை நன்றாக கவனித்தறிந்திருந்தார். பிறகு அவர் மைசூர் ராஜ்யத்தின் அதிபதியானபின், புதுச்சேரியிலிருந்து பிரஞ்சுப் படையதிகாரிகளை வரவழைத்து, தன்னிடம் உத்தியோகத்திலமர்த்தி, தன் படைகளை ஐரோப்பிய முறையில் பழக்குவித்தார். ஆயினும் அவருக்கு ஆங்கிலேயரிடம் நட்பாகவிருக்க வேண்டுமென்றே விருப்பமிருந்ததாகத் தெரிகின்றது. ஆனால் அச்சமயத்தில் ஆங்கிலேயர் 'பாராமஹால்' எனப்படும் சேலம், கோயம்புத்தூர் ஜில்லாக்களைக் கைப்பற்ற முயற்சிசெய்து வந்தார்கள். இதன் சம்பந்தமாக ஹைதருக்கும் ஆங்கிலேயருக்குமிடையில் யுத்தந் தொடங்கியது. முதலில் ஆங்கிலேயர் பல விடங்களைப் பிடித்தார்கள். இப்போது ஹைதர், மராட்டியர் ஆங்கிலேயருடன் சேராமலிருக்க, அவர்களுக்குப் போதுமான லஞ்சத்தைக்கொடுத்து விட்டு தன் படைகளுடன் புறப்பட்டார். இதன் பிறகு ஹைதர், கோயம்புத்தூர், ஈரோடு, மதுரை, தஞ்சாவூர், கூடலூர் முதலிய விடங்களை யெல்லாம் எளிதில் பிடித்து விட்டார். அவருக்குச் சென்ற விடமெல்லாம் வெற்றியே பிராப்தமாயிற்று. அவர் கீழ்க்கடலோரமாக வந்து, சென்னையின் முன் முகாம் போட்டார். இதில் ஆங்கிலேயருக்குப் பெருத்த தோல்வியும், நஷ்டமும் விளைந்தது. அவர்களுடைய முக்கிய

படையதிகாரிகள் பலர் ஹைதரிடம் சிறைப்பட்டு விட்டார்கள். அவர்கள் படைகளும் தோல்வியில் மிகுந்த கஷ்டமடைந்தன. கடைசியில் அவர்கள் ஹைதர் இஷ்டப்படி சமாதானஞ் செய்து கொண்டார்கள். இச்சமாதானத்தின் படி, ஆங்கிலேயரும், ஹைதரும், ஒருவர்க்கொருவர் சிநேகமாயிருப்பது மன்றி, ஆபத்து வந்த போது, படைகளால் உதவவும் கட்டுப்பட்டிருந்தார்கள்.

பின்னும் யுத்தம்.

ஆனால், ஆங்கிலேயர், தம் உடன்படிக்கையின் நிபந்தனைப்படி நடக்க வில்லை. மாராட்டியர் நான்காம் முறை ஹைதரது ராஜ்யங்களின் மீது படையெடுத்து வந்து, சவுத்வரி கேட்டார்கள். இப்போது ஆங்கிலேயர் அவருக்கு உதவி செய்ய முன்வரவில்லை. ஹைதர் மறுபடியும் மாராட்டியர் கேட்டதைக்கொடுத்து, அவர்களுடன் சமாதானஞ் செய்து கொள்ள வேண்டியதாயிற்று. பிறகு ஆங்கிலேயருக்கும், பிரஞ்சுக்காரருக்கு மிடையில் யுத்தந் தொடங்கியது. இதிலும் ஆங்கிலேயர் தம் உடன்படிக்கையின் நிபந்தனையை மீறி, ஹைதர் ராஜ்யத்திலிருந்த பிரஞ்சுக்காரர்களது மாஹி என்னுமிடத்தைத் தாக்கிப் பிடித்துக் கொண்டார்கள். இதன் பிறகு, ஹைதர் சும்மாவிருக்க முடியவில்லை. அவர் பின்னும் ஆங்கிலேயருடன் யுத்தந் தொடங்கினர்.

குடம் கள்ளுக்கு லக்ஷம் வராகன்.

இப்போது ஆங்கிலேயரை எதிர்த்துச் சண்டை செய்ய இரண்டு பேர்கள் ஹைதரை அழைத்தார்கள். ஒருவர், பிரஞ்சுக்காரர், மற்றொருவர் மாராட்டியர். பேஷ்வா மாதவராவ் இறந்த பின். நானு பட்னவிஸ் என்னும் அதி சாமர்த்திய சாலியாகிய ராஜரீக நிபுணர், மாராட்டியரது தலைவராயிருந்தார். அவர், நம் சுதேசமன்னர்கள் ஒருவருடனொருவர் சண்டை செய்யாமல், எல்லோரும் ஒன்றுசேர்ந்து, ஆங்கிலேயரை எதிர்த்து, நாளுக்கு நாள் பெருகிவரும் அவர்களுடைய சக்தியை முதலில் அழிக்க வேண்டுமென்று கருதி, ஹைதரைத் தன்னுடன் சேர்நது கொள்ளும்படி அழைத்தார். ஆனால், ஹைதருக்கு மாராட்டியர் மீது சிறிதும் நம்பிக்கையில்லாமல், அவர்களது பிரேரணையைத் திரஸ்கரித்துவிட்டு பிரஞ்சுக் காரர்களுக்கு, லட்சம் வாரகன் கொடுத்து, அவர்களைத் தன்னுடன் உதவிக்குச் சேர்த்துக்கொண்டார். ஆனால் இதன் பிறகு ஹைதருக்கும், ஆங்கிலேயருக்கு மிடையில் நடந்த சண்டையில், பிரஞ்சுக்காரர் போதுமான சகாயஞ்செய்யவில்லை. இக்காரணத்தால், ஹைதர், 1782-ம் வருஷத்தில் நடந்த சண்டையில், முதலில் பறங்கிப்பேட்டையிலும், சோளங்கிபுரத்திலும் பிறகு ஆங்கிலேயரிடம் கடுமையான தோல்வியை யடைந்தார். ஆயினும் இதனுல் அவர் ராஜ்யத்திற்கு அபாய மில்லை. அவர் மறுபடியும் புதுப்படைகளைச் சேகரித்து, யுத்தத்தைத் தொடங்குமுன், வேலூரில், ராஜபிளவுகண்டு, மரண மடைந்தார். அவர் மரண காலத்தில், தான் பேஷ்வா நானு பட்னவிஸ் கூறிய யோசனைப்படி செய்யாததற்காக மிகவும மனம் வருநதினர். மாராட்டியர் உதவியை விட்டுப் பிரயோஜனமில்லாத பிரஞ்சுக்காரர்களது உதவியை வேண்டிப் பெற்றதைக் குறித்தே, அவர் "நான் லட்சம் வாரகன் கொடுத்து, ஒரு கள்ளுக்குடத்தை வாங்கினேன்" என்று வருத்தத்துடன் கூறினர்.

## மோஹனலால் கம்பெனி.

(456-ம் பக்கத் தொடர்ச்சி.)

வரும் திடுக்கிட்டு எழுந்தார்கள். மணி 12-க்கு மேலாயிற்று. ரயில் வண்டி சப்தமோ என நினைத்தார்கள். ஆனல் கப் கப் என்று அதன் சப்தம் நன்கு கண்டுகொள்ளலாம். கொஞ்ச நேரத்தில் மூவர் பங்களாவினுள் நுழைவது தெரிந்தது. "யார்! இவ்விதம் திடீரென்று வருவது?" என்று மோஹன்லால் கதவைத் திறந்தான். காகிகோட், தோல் தோள் பட்டைகள் முதலியன அணிந்து ஒருவன் முதலில் உள்ளே நுழைந்தான்.

"கிருபாசங்கரா? என்ன! இவ்வாறு திடீரென்ற—" அவன் பின் ஒரு பனிதனும் ஒரு ஸ்திரியும் வந்தார்கள். "நாங்கள் என்ன செய்வது. விஷயததைக் கேட்டால் இப்படி வந்ததுதான் சிறந்தது என்று சொல்வீர்?" என்று பதிலளித்தான் கிருபாசங்கர்.

"என்ன நடந்தது?"

"அந்த மகாராஜாவிடம் யாரோ நாட்டுக்கோட்டை செட்டியார் அதிகப் பணம் கொடுப்பதாகச் சொன்னராம். ஆதலால் எல்லா நகைகளையும் அவர் கொடுக்க முடியாது என்று சொல்லிவிட்டார். இதோ அவர் பெண்ணை அனுப்பியிருக்கிறர் முன் பணமாக பாதித்தொகை அனுப்ப வேண்டுமாம்". "சிச்சி! இதென்ன மரியாதை!' என்று மோஹன்லால் அந்த ஸ்திரீயை ஒரு நாற்காலியில் உட்காரச் சொன்னன். "இதில் மரியாதைக் குறைவு என்ன? இதோ சில நகைகள் உங்கள் முன் பணத்திற்கீடு வைத்துக்கொள்ளும். இப்போதே பணத்தைக் கொடுத்து விட்டால், இந்தப் பெட்டியைக் கொடுத்து விட்டு நான் திரும்புவேன்" என்று இங்கிலீஷில் அந்தப் பெண் பேசினள். செட்டியார் அப்பெண்ணைப் பார்த்து மதிமயங்கி அவளையே நோக்கியிருந்தார். அவள் கையில் இருந்த பெட்டியைத் திறந்து காட்டியதும் செட்டியார் பிரமித்து மூச்சு விடுவதை நிறுத்திவிட்டார். அப்பெட்டியில் நவரத்னக் கற்கள் பதிக்கப்பெற்ற பல நகைகள் இருந்தன. இவைகள் பத்து லக்ஷ ரூபாய் இருக்குமென செட்டியார் நினைத்தார்.

"இப்போதா? இன்றிரவா?"

"ஆம்! என் பிதா ரங்கூனில் காத்து இருக்கிருர். நாங்கள் வந்த ஆகாய விமானம் காத்துக்கொண்டிருக்கிறது."

"நல்ல வேடிக்கை! என் இடுப்பில் லட்ச லட்சமாக ரூபாய்கள் முடித்து வைத்திருக்கிறேனு!" என்று மோஹன்லால் உலாவிக்கொண்டே யோசித்தான். மற்ற இருவரும் ஜன்னலண்டை நின்று கொண்டிருந்தனர்.

ராஜகுமாரியிடம் ஒருவன் சென்று ஏதோ சீன பாஷையில் என்னவோ பேசினன் சில நிமிஷங்கள் கழிந்தன. மறுபடியும் அவள், "சர்! நான் புறப்பட வேண்டும். இந்தப் பெட்டியை எடுத்துச் செல்கிறேன் ஐந்து லட்ச ரூபாய்க்கு செக் கொடுத்தாலும் என் பிதா ஏற்றுக் கொளவார். உன் பம்பாய் பாங்கியின் பேரில் கொடுக்கலாம். பிறகு ஒருவித ஏமாற்றமும்:—"

"ஏமாற்றம்! நான் ஒருபோதும் அப்படிச் செய்ததில்லை. ஆனல் இப்போது என்னிடம் பணம் இல்லை. இவ்வளவு நெருக்கடியாகப் பணம் கேட்டால என்ன செய்வது"

"ஆனல் செட்டியாரிடம் நான் ஏற்பாடு செய்யலாம் என்று அப்பாவிடம் சொல்கிறேன்"

"வேறு வழி இல்லை" என்று மோஹன்லால் கையைப் பிசைந்தான். இச் சமயம் செட்டியார் மெதுவாக மோகன்லாலைக் கூப்பிட்டான். "இந்த நகைகளைக் காட்டி நான் நாளை பணம் பொட்டித் தருகிறேன்" என்ருன். "பிரயோசனம் இல்லை அப்பா! இவர்கள் லேசில் மசிய மாட்டார்கள். கையில் காசு வாயில் தோசை. இப்போது உடனே ஐந்து லட்சம் கொடுத்தால்தான் பெட்டியைக் கொடுப்பாள்."

செட்டியார் சற்று யோசித்தார். கடைசியில் "நான் ஐந்து லட்சத்திற்குசெக்தருகிறேன்" என்ருன். "அப்படியா! அனாவசியமாக இதில் தலையிட்டுக் கொண்டு பிறகு வருந்த வேண்டாம். நான உம்மைப் பணம் கேட்கவில்லை."

"பயப்பட வேண்டாம்" என்று செட்டியார் செக் புத்தகத்தை எடுத்து ஐந்து லட்ச ரூபாய்க்கு செக் எழுதிக்கொடுதான். செக்கைப் பெற்றுக் கொண்டவுடன் ராஜ குமாரியும் மற்ற இருவரும் வெளியே சென்ருர்கள். நகைப் பெட்டியை மேஜையின் மீது வைத்து விட்டு மோஹன்லால் இரண்டு கிளாஸ்களில் விஸ்கி கலந்து தான் ஒரு கிளாஸும் செட்டியார் ஒரு கிளாசுமாகப் பருகினர்கள். "சமயத்தில் உதவி செய்தாய்! நமக்குள் அதிக சிநேகம் ஏற்படா விட்டாலும் உன்னைப் பார்த்தவுடன் உன் குணத்தை அறிந்தேன்" என்று லால் செட்டியாரைத் தட்டிக்கொடுத்தான். இதற்குள் செட்டியார் விஸ்கிபருகி கிளாஸ் கீழே வைக்குமுன் நாற்காலியிலிருந்து சாய்ந்தார். உடனே மோஹன்லால் கைதட்டினன். வெளியே சென்ற ராஜ குமாரியும் மற்ற இருவரும் ஓடிவந்தார்கள். செட்டியாரை இருவர் தூக்கிக்கொண்டுபோய் ஒரு அறையில் போட்டுக் கதவைப் பூட்டினர்கள். விளக்கு அணைக்கப்பட்டது. அரை மணிக்கெல்லாம் எல்லாரும் ஆகாய விமானத்தில் பறந்து சென்றனர்.

திங்கட்கிழமை 12-மணிக்கு மோஹன்லால் நாஷனல் பாங்கியில் செக்கைக் கொடுத்தான். அவ்வளவு பெருத்த தொகையைக் கொடுக்க சந்தேகப்படுவார்கள் என்று எதிர்பார்த்தே அதன் ஏஜெண்டுக்குத் தயாராக ஒருகடிதமும் வைத்திருந்தான் நேராக ஏஜெண்டிடம் இரண்டையும் கொடுத்தான். பணத்தை சில்லரை நோட்டுகளாக விரும்பினபடியால் சற்று தாமதமாயிற்று. எல்லாவற்றையும் தான் கொண்டுவந்திருநத ஒரு தோல் பையில திணித்துக்கொண்டு ஏஜெண்டிடம் விடைபெற்றுக் கொண்டு வேகமாக வெளியே வந்தான். மாடிப்படியில் யாரோ ஒருவர் இவன் மீது மோதிக்கொண்டார். "மன்னிக்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே அவர் மோஹன்லால் கையில் இருந்த தோல் பையைத் தட்டிவிட்டார். உடனே இரண்டுகான்ஸ்டேபில்கள் வெகு சிரமப்பட்டு மோஹன்லாலைப்பிடித்து விலங்கிட்டார்கள். தன் மீது மோதிக்கொண்ட நாயரைப் பார்த்து கண்டபடி தூஷித்தான் மோஹன்லால்.

"வீண் வருத்தம் வேண்டாம். உன் கம்பெனி ஆட்கள் எல்லாரையும் பிடித்துவிட்டார்கள். மஹபிர்சிங் பம்பாய் செல்லத் தயாராக இருந்தான். அவனைப் பிடிப்பது தான் கஷ்டமாயிருந்தது. செட்டியாரை நேற்று இரவு கூட்டிவந்தேன். அவர் மயக்கம் பூராவும் தெளியவில்லை." என்ருர் நாயர்.



# சங்கீதமும் நாடகமும்



## நாடகமேடை நினைவுகள்

[காபிரைட்.]

[ராவ்பகதூர் ப. சம்பந்த முதலியார், பி.எ.பி.எல். எழுதியது.]

இந்நாடகத்தில் மூன்றும் அங்கத்தில் மூன்றும் காட்சியை நடிக்கும்பொழுது அநேகம் சபையோர்கள் ஒரு தப்பிதம் செய்கிருர்கள். அன்றியும் அநேகம் பேர்கள் இதை எப்படி நடிப்பது என்று கேட்டிருக்கிருர்கள். ஆகவே இதைப்பற்றி இங்கு தெளிவாய் எழுதுகிறேன். இக்காட்சியில், இரண்டு குகைகள் இருக்கின்றன. வலது புறம் குகையில் ராஜ குமாரன் அடைபட்டிருக்கிருன்! இடது புறம் குகையில் தத்தன் அடைக்கப்பட்டிருக்கிருன். மோகனவல்லியை மோசம் செய்யும் பொருட்டு, ராஜிவாட்சி, குகைக்குத் தன் முதுகைக் காட்டி நின்று, வலது புறம் குகையில் ராஜகுமாரனிருப்பதாகவும், இடதுபுறம் குகையில் தத்தனிருப்பதாகவும் சொல்லுகிருள். இவளுக்கு எதிராக நிற்கும் மோகனவல்லிக்கு வலதுபுறம், ராஜகுமாரிக்கு இடதுபுறமாகும். அவளது இடதுபுறம், இவளுக்கு வலதபுறமாகும். ஆகவே இக்காட்சியில் இவர்கள் இருவரும் பேசும்பொழுது, ராஜிவாட்சி குகைக்குத் தன் முதுகைக்காட்டி நிற்கவேண்டும்; மோகனவல்லி, சபையோருக்குச் சற்று முதுகைக் காட்டி நிற்கவேண்டும். இப்படிச் செய்யாவிட்டால் சபையோருக்கு இந்த சூட்சுமம் அர்த்தமாகாது.

இவ்வருஷம் எங்கள் சபைக்கு ஒரு புஸ்தகசாலை (Library) ஏற்படுத்தினேம்; நான் அதுவரையில் சேகரித்து வைத்த தமிழ்நாடகப் புஸ்தகங்களையெல்லாம் கொடுத்து, மற்ற அங்கத்தினர்களிட மிருந்தும், இலவசமாக, அநேக நாடக புஸ்தகங்களைச் சேர்த்து, ஒரு சிறு புஸ்தகசாலையாக்கி, இவ்வருஷம் தசராக்கொண்டாட்டதின் கடைசியில், விஜயதசமியன்று, இதை வி. கிருஷ்ணசாமி ஐயரைக் கொண்டு திறந்து வைத்தோம். அப்பொழுது 180 புஸ்தகங்களுடன் ஆரம்பிக்கப்பட்டது தற்காலம் 1670 புஸ்தகங்கள் அடங்கியதாயிருக்கிறது. தமிழ் தெலுங்கு கன்னடம் மலையாளம் என்னும் நான்கு திராவிட பாஷைகளிலுமுள்ள நாடகங்களையெல்லாம் இதில் சேர்த்துவைக்கவேண்டுமென்பது எங்கள் கருத்து. இதை வாசிக்கும் எனது நண்பர்களிடம் அப்படிப்பட்ட புஸ்தகங்களிருக்குமாயின், அவற்றை அவர்கள் இப் புஸ்தகசபைக்கு உதவுவார்களாஞல் எங்கள் சபை அவர்களுக்கு நன்றி பாராட்டும்.

அன்றியும் இவ் வருஷம் எங்கள் சபையின் அங்கத்தினர் 500 பெயர் ஆனர்கள். 500 ஆவது அங்கத்தினர் ஹைகோர்ட்டில் அட்வகேட் ஜெனராலயிருந்த, எஸ். ஸ்ரீனிவாச ஐயங்கார் அவர்கள். அவர் எங்கள் சபையின் வழக்கப்படி, இவ் வருஷம் நவம்பர் மாசம் 15-ம் தேதி ஒரு பெரும் விருந்தளித்தார். அதில் சபையின் சரித்திரத்தைச் சார்ந்த துணுக்குகளை (Tit-bits) யெல்லாம சேர்ந்து ஒரு காட்சியாகக் காட்டினேன். சபை ஆரம்பித்து, 17 வருஷங்கள் பொறுத்துத்தான் 500 அங்கத்தினர்களானேம்.

மேற் கூறிய இரண்டு நாடகங்களன்றி, நான் இவ்வருஷம் தசராவின் முதல் நாள் ஆடவேண்டியதற்காக, "காமோத்யானம்" (The Garden of Love) என்கிற ஒரு சிறு நாடிகையை எழுதினேன். அதை இன்னும் நான் அச்சிடவில்லை. இவ்வருஷம் அதையும் நான் பிறகு எழுதியுள்ள இன்னும் சில சிறு காட்சிகளையும் சேர்த்து, "விடுதிப் புஷ்பங்கள்" என்று பெயர் வைத்து அச்சிடலாமென்றிருக்கிறேன், அன்றியும் 'சபாபதிமுதலியார், ஒரு வருடம் பொறுத்து' என்று ஒரு காட்சி தசராவுக்காக எழுதினேன். இதையும் சென்ற வருஷம் நடத்திய 'சபாபதி' காட்சியையும் சேர்த்து "சபாபதி" முதல் பாகம் என்று அச்சிட்டிருக்கிறேன்.

இனி 1909 ஆம் வருஷத்தில் நடந்த விஷயங்களைப் பற்றி எழுதுகிறேன்.

இவ்வருஷம் எங்கள் சபை அங்கத்தினராயிருந்த பி. எஸ். துரைசாமி ஐயங்காரால் எழுதப்பட்ட 'ஜவலிதா—ரமணன்' என்னும் தமிழ் நாடகம் ஆடப்பட்டது. இது ஷேக்ஸ்பியர் மகாகவி எழுதிய, "ரோமியோ—ஜூலியெட்" (Romeo-Juliet) என்னும் நாடகத்தின் மொழி பெயர்ப்பாம். இவர் இதற்கப்புறம் யுத்தலோலன், பிரஹ்லாதன், வள்ளித் திருமணம், முதலிய நாடகங்களைத் தமிழில் எழுதியிருக்கிருர். இவர் நாடகங்களை எழுதுவதுமின்றி, அவைகளில் நடிக்கும் திறமையும் வாய்ந்தவர். அப்படியிருந்தும் தனது நாடகத்தில் என்னைக் கதாநாயகனை ரமணன் (Romeo) பாத்திரத்தை எடுத்துக் கொள்ளும்படிக் கேட்க, நானும் இசைந்தேன். அதன் பேரில் ஜவலிதை (Juliet) பாத்திரம் எனதாருயிர் நண்பர் சி. ரங்கவடிவேலுவுக்கே கொடுக்கப்பட்டது. இந்நாடகம் நாங்கள் விக்டோரியா பப்ளிக் ஹாலில் நடித்த பொழுது, முக்கியமாக ஒரு சமாசாரம் தான் எனக்கு ஞாபகமிருக்கிறது. சாதாரணமாக நான் மேடையின் மீது தோன்றும்பொழுது ஏதாவது மிகுந்த முக்கியமான சந்தர்ப்பங்களில் தான் சபையோர் கரகோஷம் செய்வார்கள்; இந்நாடகத்தில் நான் முதற்காட்சியில் தோன்றியவுடன் கரகோஷம் செய்யவே, 'இதென்ன விந்தை! இப்படி எப்பொழுதும் நடந்ததில்லையே! இதற்குக் காரணம் என்ன' வென்று எனது நண்பர்களைக்கேட்க, அவர்கள், "இதுவரையில் மற்றவர்களுடைய நாடகங்களில் ஆடுவதில்லையென்று தீர்மானித்த நீ இதில் அத் தீர்மானத்தினின்றும் பிறழும்படி நேரிட்டதேஎனக்கை கொட்டினேம்!' என்று தெரிவித்தார்கள். இந்தத் தர்மசங்கட சந்தர்ப்பத்திற்கு நான் என்ன சொல்வது? நான் அவ்வாறு மற்றவர்களுடைய நாடகங்களில் ஆடக்கூடாது என்று எப்பொழுதும் தீர்மானம் செய்துகொண்டவனல்லன். எனதுயிர் நண்பர் என்னுடனன்றி மற்றவர்களுடன் நாடகமேடையில் ஆடுவதற்குத் தனக்கு இஷ்டமில்லை என்று எனக்குத் தெரிவித்தபிறகு, நானும் அவருடனன்றி மற்றவர்களுடன் அரங்கில் ஆடுவதில்லையென்று தீர்மானித்ததன்றி வேறென்றும் கிடையாது. ஆகவே, இதற்குமுன் எங்கள் சபையோரால் ஆடப்பட்ட மற்றவர்கள் எழுதிய இரண்டொரு நாடகங்களில், நாங்களிருவரும் ஒன்ருய் ஆடக்கூடிய தக்க பாத்திரங்கள் கிடைக்காமையால், அப்படிச் செய்யவில்லை. இது தான் உண்மை. இது இப்படியிருக்க நான் இதரர்களுடைய நாடகங்களில் ஆடக்கூடாது என்கிற கொள்கையுடையவனுயிருந்தேன் என்று வீண் அபவாதம் மற்றவர்களுடைய மனதில் இருந்தால் இதற்கு நான் என் செய்வது? இதற்குப் பிறகு நானும் என்னுயிர் நண்பரும் மற்ற நூலாசிரியர்கள் எழுதிய நாடகங்களில் பலவற்றை ஆடியிருக்கிறேம். உலகில் இத்தகைய தவறுன எண்ணங்கள் உண்டாவதைத் தடுக்க யாரால் முடியும் ?

இவ்வருஷம் நடந்த மற்றொரு கவனிக்கத்தக்க விஷயம் என்ன வென்ருல், எங்கள் சபையார் ராஜப்பிரதிநிதி (Viceroy) லார்ட் மின்டோ (Lord Minto) சென்னைக்கு விஜயம் செய்த பொழுது, காஸ்மா பாலிடன் கிளப்பில், அவருக்குப் பெரும்விருந்தொன்று அளித்த காலையில் அவர் முன்னிலையில் நடித்ததேயாம். ராஜப்பிரதிநிதிக்கும் மேற்சொன்ன கிளப்பார் உபசாரணை செய்ய வேண்டுமென்று தீர்மானித்தவுடன், எங்கள் குடும்ப சிநேகிதராகிய காலஞ்சென்ற பிட்டி தியாகராய செட்டியார் அவர்கள், என்னை அழைத்து, "சுகுணவிலாச சபையார் ஒரு மணி நேரத்திற்கு ஏதாவது காட்சிகள் ஆட வேண்டும். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் நீ செய்துவிடு" என்று சொன்னர். 'ஆகட்டும்' என்று ஒப்புக்கொண்டு அநேகம் ஆக்டர்கள் வரக்கூடியதாகிய 'மனோஹரன்' நாடகத்தில் முதல் அங்கம் நான்காவது காட்சியை ஆடத் தீர்மானித்தோம்.

(தொடரும்.)




## ஸங்கீதம்.

[காபிரைட்.]

(ஸ்ரீமான் வி. ஆர். ஸ்ரீனிவாஸய்யங்கார், பி.ஏ. எழுதியது.)

பல்லவி

ஆட மோடி கலதே? ராமய்ய, மாட (லாட)

அனுபல்லவி

தோடு நீட நீவேயனுத்ஸு பக்திதோ
கூடி நீ பாதமுனு பட்டுகொன்ன நாதோ மாட (லாட)

சரணம்

ஸதுவுலன்னி தெலிஸி, சங்கராம் சுடை,
ஸதயு டாசுக ஸம்பவுண்டு ம்ரொக்க,
கதலு தம்முனி பல்கஜேசி திவிகாகனு,
த்யாகராஜேபாடி? மாட (லாட)

II

ராமய்ய —ராம
தோடு நீட —துணையும் தங்குமிடமும்
நீவே அனுத்ஸு —நீயேயென்று
பக்திதோ கூடி —பக்தியுடன்
நீ பாதமுனு பட்டு கொன்ன நாதோ —உன் பாதங்களைப் பிடித்துக்கொண்ட என்னுடன்
மாடலு ஆட மோடி கலதே —வார்த்தை சொல்ல உனக்குப் பிடிவாதமா?
ஸதுவுலு அன்னி தெலிஸி —வித்யை யாவையும் அறிந்து
சங்கராம்சுடை —சங்கரனுடைய அம்சமாக
ஸதயுடு ஆசுக ஸம்பவுண்டு —பரமதயாநிதியான வாயு புத்திரன்
ம்ரொக்க —உன்னை வணங்க
தம்முனி கதலு பல்கஜே சிதிவிகாகனு —உன் வாலாற்றை உன் தம்பியால் சொல்லுவித்தாயானதால்
த்யாகராஜு ஏபாடி —இந்த த்யாகராஜன் எம்மாத்ரம்?

III

தோடு நீ:—தெலுங்கு பாஷையில் எப்பொழுதும் சேர்ந்து வரும் இரண்டு பதங்களுள்ள ப்ரயோகங்களில் இதொன்று. 'மஞ்சி செட்ட' 'பெத்த பின்ன', 'வரவு வருஸ' முதலியவை இவ்விதமே. ஆஞ்ஜநேயரைப்போல் ஸ்வாமிகளும் வேறு பற்றில்லாமல் பரமபக்தியுடன் திருவடிகளை அண்டிப் பிழைத்தாரென்றும், ஆஞ்ஜநேயருக்குக் கிடைத்த பாக்யம் தனக்குக் கிடைக்கவில்லையென்றும் முறையிடுகிறார்.

ஸதுவுலு:—ஸூர்யனிடத்தில் நவவ்யாகரணங்களையும் மாருதி கற்றார்.

சங்கராம்சுடை:—மாருதியின் தாயான அஞ்சனை சங்கரபகவானைக் குறித்துக் கடுந்தவம் செய்துகொண்டிருக்கும்பொழுது, அவர் ப்ரஸன்னமாகித் தன் தன்மையுள்ள ஓர் புத்ரனை அனுக்ரஹித்தார். வாயு பகவானுடைய அம்சமும் அதனுடன் கலந்தது. தசரதரால் கைகேயிக்குக் கொடுக்கப்பட்ட திவ்ய பாயஸத்தை ஒரு பருந்து கொத்திக் கொண்டுபோய், வழியில் மற்றொரு பருந்துடன் சண்டையிடும் பொழுது கீழே போட்டுவிட்டது; அது அஞ்ஜனாதேவியின் கையில் வந்து விழ, அவள் அதைப் பகவானுடைய ப்ரஸாதமென்று உட்கொண்டாள்; அதனால் விஷ்ணுவின் அம்சமும் சேர்ந்தது. ஆகையால் ஆஞ்ஜநேயரிடத்தில் மஹாவிஷ்ணு, பரமசிவன், வாயுபகவான் இம் மூவருடைய அம்சங்களும் சேரும்படியான அரிய பாக்யம் ஹனுமாருக்குக் கிடைத்தது:—ஆனந்த ராமாயணம்.

ஸதயுடு:—மாருதியின் பலம் பராக்ரமம் வீர்யம் முதலியவை எல்லையற்றவை. ஆனாலும் அவைகளை அவர் தனக்கு ஏறக்குறைப் ஸமமானவர்களிடத்திலேயே உபயோகித்தார். ஸிம்ஹிகை, ஸுரஸை, லங்காதேவதை முதலியவர்களிடத்திலும் அசோகவனத்து ராக்ஷஸிகளிடத்திலும் மாருதி நடந்துகொண்ட விதமே இதற்கு அத்தாக்ஷி.

ஆசுக ஸம்பவுண்டு:—ராமலக்ஷ்மணர்களின் வரவை அறிந்த ஸுக்ரீவனால் ஆஞ்ஜநேயர் அனுப்பப்பட்டு, அந்த ராஜகுமாரர்களைக் கண்டு பேசி, ஸுக்ரீவனுடன் ஸ்நேஹம் செய்வித்த கதையை ராமாயணம் கிஷ்கிந்தாகாண்டத்தில் பார்க்க.

தம்முனி:—ஆஞ்ஜநேயர் கேட்ட கேள்விகளுக்கு ராமன் நேரில் பதில் சொல்லவில்லை. லக்ஷ்மணனை அந்த வேலையில் நியமித்தார். இது ராஜநீதியென்பதை சுக்ர சாணக்ய காமந்தக நீதிசாஸ்த்ரங்களில் காணலாம்.

ஏபாடி:—மேற்சொன்ன அரிய குணங்களையுடைய மாருதிக்கே நீ பதில் சொல்லவில்லை; அந்தக் குணங்கள் யாதொன்றுமில்லாமல், கேவலம் அசக்தனென்பதையே சிபார்சாகக் கொண்ட இந்த ஏழை ப்ராஹ்மணன் த்யாகராஜன், உனக்கு எம்மாத்ரம்? இவனுக்கு நீ பதில் சொல்வாயா? இதொரு ஆச்சர்யமல்லவென்கிறார். இங்கே வேறு பாடங்கள் வழங்கினாலும் இப் பாடமே பொருத்தமுள்ளதென்று தோன்றுகிறது.

சாருகேசி ஆதி

பல்லவி

ஆ ட மோ டி க ல தே ரா மய் ய மா ட
பா த பா ம க ரி க ஸா ரி கா மபா ம

அனுபல்லவி

தோ டு நீ ட நீ வே ய னு த்ஸு பக் தி தோ
பா த நீ ஸ நீ ஸா ரிக மா மக ரி கமகரி ஸா
கூ டி நீ பா த மு னு — பட் டு கொன் ன நா தோ மாட
ஸரிகா ரீ ஸ நீ த நீ ஸா — நித தநி நீ தா பா பம காம

சரணம்

ஸ து வு லன் னி தெ லி ஸி சங் க ராம்
பா பா பா பமமா ம மா மா மா கா க கரீ
சு டை ஸ த யு டா சு க ஸம் ப வுண் டு ம்ரொக் க
ரீ ரி ஸ ஸ ஸ ஸா ஸ ஸ ஸ ரி கா ம பா பா

(இது 26-வது மேள ராகம்.)



லண்டனில் 'வேட்டை நாய் ஓட்டப்பந்தயம்' பிரபலமாகிவருகிறது. மின்சார முயலைத் துரத்தியோடும் நாய்ப்பந்தயக் காட்சியைப் படத்தில் காணலாம். P P A



பர்லின் நகரில் தெருவின் குறுக்கே கட்டப்பட்டிருக்கும் பெரிய மாளிகை. இந்த மாளிகையின் கீழ் பெரிய ரோடுகள் போடப்பட்டு வண்டிப்போக்குவரத்துகள் நடைபெறுகின்றன. ENP



இங்கிலாந்தில் அகில இந்திய கிரிக்கெட் கோஷ்டி, ஸஸக்ஸில் முதல் போட்டிப் பந்தயத்தில் விளையாடிய காட்சி; ஸயீத் வாசிர் ஆலி ஆடுகிறார்.
GSA



கிரேட் பிரிட்டன் டென்னிஸ் போட்டி விளையாட்டுகளில் இந்தியப் பிரதிநிதிகளான பிரஸாதும் லாலும் பிரஞ்சுப் பிரதிநிதியுடனும் ஜகோஸ் லோவேகியா பிரதிநிதியுடனும் விளையாடும் காட்சி.
GSA



புத்தர் ஜனன உத்ஸவத்தின்போது டோகியோ நகரில் ஸ்கூல் சிறுமிகளால் நடத்தப்பட்ட புஷ்ப ஊர்வலம் G.E.A



போர்ட் ஸெயின்ட் துறைமுகத்திற்கருகில் ஏராளமாக விற்கப்படும் முலாம்பழக் குவியல்கள். P.P.A.

ஹாஸ்யப்பகுதி

# ஆருத்ராதரிசனப் பிரயாணம்

(ஸ்ரீமான் P. R. R. ஐயங்கார் எழுதியது.)

ஆருத்ரா தரிசனம்.

நான் வைதிகப் பித்து பிடித்தவன் இல்லையே யானாலும் சுதேசமித்திரன் பத்திரிகையிலிருந்த ரயில்வே பிரசுரத்தைக் கண்டதும், சிதம்பரம் போகாமல் இருக்கக் கூடாது, அந்த வருஷத்திய ஆருத்ரா தரிசனம் செய்யாமல் இருக்கக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டேன். என் மனைவியை மெதுவாக நல்ல தனஞ் செய்தேன். அவள் மோதிரத்தை வாங்கிக் கொண்டு வீட்டை விட்டு வெளியே கிளம்பினேன். நான் மறுமுறை வீட்டிற்குத் திரும்பினபோது கையில் மோதிரம் இல்லை. ஆனல் பத்து ரூபாய் நோட் ஒன்று இருந்தது. மோதிரத்தை மார்வாடி மிகவும் பந்தோபஸ்தாக வைத்திருப்பதாக எனக்குச் சத்தியஞ் செய்து கொடுத்தபோது, வீட்டிற்கு எனக்கு உபயோகமான பணத்தை எடுத்து வருவதா, அல்லது உபயோக மில்லாத மோதிரத்தை எடுத்துக்கொண்டு வருவதா?

என் மனைவியின் கோபம் என்னுடைய பயணத்தை யென்னவோ நிறுத்தவில்லை. ஆருத்ரா தரிசன சமயத்தில் நான் சிதம்பரத்தில் இருந்தேன். கூட்டமோ அசாத்தியம். ஆயினும் இடிதாளாதவர்களுககு மோட்சம் எப்படிக் கிடைக்கும்?

‘உயர்ந்த காபி மூணணு’

கடைசியல தரிசனம் முடிந்தது. கூட்டத்தினின்றும் நான் வெளிக்கிளம்பினேன். பசியோ அசாத்தியமாக விருந்தது. ஒரு சிற்றுண்டிச் சாலைக்குச் சென்று முதன் முதல் கொஞ்சம் பலகாரம் சாப்பிட்டுவிட்டு பார்ப்பன வாலிபரைக்காப்பி கொண்டு வரும்படி கட்டளையிட்டேன். அதற்கு அவன், “சார், சாதாரண காப்பி ஒன்னரையணு, உயர்ந்தது மூணணு” என்றான்.

மூணணுவுக்கு உயர்ந்த காபியென்று சொல்லி அந்த வாலிபன் காப்பி கொண்டுவந்தானே, அதைப் போன்றதை இனி ஆருத்ரா வின்போது அதே ஹோடலில்தான் சாப்பிடலாம். எரிநீர்காய்ச்சப்பட்டிருந்ததேயொழிய, பாலாவது காப்பித் தூளாவது அதில் சேர்ந்ததாக எனக்குத் தோன்றவில்லை. அதில் சேர்க்கப்பட்டிருந்த சக்கரையைப் பற்றி எனக்கு அந்த நீரின் தித்திப்பால் தெரியவில்லை. ஜலுப்பு நாற்றத்தால் தெரிந்தது. ஒருக்கால் சர்க்கரைக்குப் பதில் வெல்லத்தைத் தான் அந்த சூடான எரிநீரில் கலந்து வைத்திருந்தார்களோ என்னவோ. அது எப்பேற்பட்ட இழவாக இருந்தாலும் சாப்பிட்டபிறகு பணத்தைக் கொடுத்துத்தானே ஆகவேண்டும். வழியில் காலகண்டனைப் போல் பிப்பாயைப்போன்ற தொப்பையைப் போட்டுக் கொண்டு வியர்க்க விருவிருக்க இரண்டு கையாலும் பணத்தை வாரி வாரி தன் பெட்டியுள் போட்டுக்கொண்டிருந்தானே அவன். பணம் தாமுடியாது என்றால் இலேசில் விடுவானே? ஆகையால் பணப்பையைத் தேடினேன். காணேம். யாரோ கும்பலில் அதனைத் திருடி யிருக்கவேண்டும்.



தச்சனுல் கதவு உடைக்கப்பட்டு நான் விடுவிக்கப்பட்டேன்.

ஜமக்காள மூட்டை

என்ன செய்வது. அந்தப் பையில் ஐந்து ரூபாயும், நான் திரும்பிப் போவதற்கு ரெயில்வே டிக்கட்டும் வைத்திருந்தேன். சென்னைக்குத் திரும்புவதைப்பற்றி பிறகு ஆலோசிக்கலாம். ஹோடல் பிராம்மணனுக்கு நான் சாப்பிட்ட பலகாரங்களின் விலையை எப்படிக் கொடுப்பது? பணம் இல்லையென்றால் அவன் இலேசில் விடுவானு? ஆகையால் அவனை ஏமாற்றுவதற்குஎன்ன வழி அகப்படும் என்று ஆலோசித்தேன். அப்பொழுது என் நாட்டம் கொல்லைப்புறம் விழுந்தது. உடனே எனக்கு ஒரு சிறந்த யுக்தி தோன்றியது. கொல்லைக்குச் சென்று, கைகால்களை யலம்பிக்கொள்வதுபோலப் பாசாங்கு செய்தேன். கொல்லைப்புறத்தில் ஓட்டலில் வேலை செய்த பலர் நின்றுகொண்டிருந்தனராகையால் கொல்லை வழியாகத் தப்புவதற்கு அவர்களுடைய கண்களில் மண்ணைத்தூவுவது அத்தியாவசியம் என்பதறிந்தேன். கையில் மேல்சவுக்கத்தால் கட்டப்பட்ட ஜமக்காள மூட்டையொன்று நான் வைத்திருந்தேன். அதை விற்றால் இரண்டணு விலை போகாது. ஆயினும் மூட்டை யென்னவோ கொஞ்சம் பெரிதாகத் தான் இருந்தது. ஆனல் கனமாக இருக்கவில்லை. ஆகையால் இரண்டு மூன்று செங்கல்களை அதனுள் யாரும் பார்க்காதபோது வைத்துக் கட்டிவிட்டு, மூட்டையை ஹோட்டல்வேலைக்காரர்களில் வயதுமுதிர்ந்தவராகவும் யோக்கியராகவும் புலப்பட்ட ஒருவரிடம் கொடுத்து, “ஐயாவாள், தயவு செய்து ஐந்து நிமிஷம் இந்த மூட்டையைப்பார்த்துக் கொள்ளுங்கள். என்னுடைய நண்பர் அதோ போகிறார். அவரிடம் ஒரு அவசர சமாசாரம் சொல்ல வேண்டும். கும்பலில் மறைந்து விட்டால் அவரைப் பிறகு தேடிக்கண்டு பிடிப்பது கஷ்டம்,” என்று பரபரப்பாகச் சொன்னேன். அவரும் உடனே “அதற்கென்ன, பார்த்துக்கொள்கிறேன். கொல்லை வழியாகவே போய் வாருங்கள்,” என்று சொன்னர். பாவம். அவ்வளவு சாதுவான மனிதனை ஏமாற்றினது என் நெஞ்சை நாளைக்கும் அறுக்கிறது. அவரும் கும்பலில் நான் எவனையோ சுட்டிக் காட்டினதும் நம்பி விட்டார். ஆயினும் அவருக்காவது அல்லது அவருடன் இருப்பவர்களுக்காவது என் சூது வெளிப்பட்டுவிட்டால் என்ன செய்வது என்னும் சந்தேகம் எனக்கு உண்டாயிற்று. ஆகையால் கொல்லைக் கதவை அவசரமாகத்திறந்து, யாரையோ கூப்பிடுவது போல் கையைத்தட்டிக்கொண்டே கூட்டம் அதிகமாக இருந்த பாகத்தை நோக்கி ஓடினேன். நான் கைத்தட்டினதைப் பார்த்து தம்மைத்தான் அழைக்கிறேனு என்னவோ என்று திரும்பிப் பார்த்தவரின் எண்ணிக்கை ஆயிரத்துக்குக் கட்டாயம் குறையாது.

டிக்கட்டில்லாப் பிரயாணம்

கையிலோ பணமில்லை. பணமில்லாதவர்களுக்கு உற்சவம் என்ன ? ஆகையால நான் சிதம்பரத்தை விட்டுச் சென்னைக்குத்திரும்புவது என்று தீர்மானித்துக் கொண்டேன். ஹோடல் காரனுவது, அல்லது அவனுடைய ஆட்களில் எவராவது என்னைப்பார்த்து விடப் போகிறார்களே என்னும் பயமும் எனக்கு இருந்தது. ஆகையால் நேராக ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றேன்.

டிக்கட்டில்லாமல் எப்படிப் பிரயாணஞ் செய்வது ? பிளாட்பாரத்துள் நுழைபவர்கள் டிக்கட்டுகள் வாங்கிக்கொண்டு போகிறார்களா இல்லையா என்று பரிசோதிப்பதற்கு வழியில் ஒரு டிக்கட்டு கலெக்டர் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவனை முதன் முதல் எப்படியாவது ஏமாற்றத்தான் வேண்டும். இல்லா விட்டால் சென்னைக்கு மீண்டும் திரும்புவது அசாத்தியமாக முடியும். ஆகையால் அவனுக்கு வந்தனமளித்து, “சார், கால அட்டவணையைப் பார்க்கவேண்டும்; கொஞ்சம் உள்ளே போய் வா அனுமதி கொடுக்கிறீர்களா?” என்று கேட்டேன். அவன் அதற்குச் சம்மதித்தான். சிறிதுநேரம் அந்தப்புகைவண்டிகளின் கால அட்டவணைகளை வாசிப்பது போல் பாசாங்கு செய்தேன். பிறகு நீருந்த குழாய்க்குச் சென்றேன். குழாயில் நீர் குடித்த பிறகு கக்கூஸுக்குள் சென்றேன். அங்கிருந்து வெளிக்கிளம்பும்போது மிகவும் ஜாக்கிரதையாக, தக்க சந்தர்ப்பம் பார்த்து வெளியே வந்தேனு கையால் டிக்கட்டு கலெக்டர் என்னைப்பார்க்க வில்லை. பிறகு பிரயாணக் கூட்டத்தில் தலை தெரியாமல் மறைந்து கொள்ளுவதுதானு கஷ்டம்? புகை வண்டி வந்து நின்றதும் அதில் ஏறி உட்கார்ந்துகொள்வது தான் கஷ்டமா?

சேங்கல்பட்டு

நல்ல காலமாக, நான் செங்கல்பட்டை யடையும்போது

இரவு 8-மணியாகி விட்டது. வழியில் எவரும் டிக்கட்டுகள் பரிசோதனை செய்யவில்லை. ஆகையால் யாதொரு கஷ்டமும் படாமல் பாதிவழியைக் கடந்து விட்டேன். ஆனால் செங்கற்பட்டில் இரண்டு மூன்று பரிசோதகர்கள் எனது புகைவண்டித்தொடரை நோக்கி வந்தனர். அவர்களைப் பார்த்ததும் ஒவ்வொரு பெட்டியிலும் ஏறி டிக்கட்டுகள் கேட்பார்கள் என்பது எனக்குத் தெரிந்தது. வண்டியை விட்டு இறங்கி, ஹோட்டலில் காப்பி சாப்பிடப் போவது போல் அவ்விடம் நோக்கிப் போனேன். எனக்கென்னவோ நல்ல பசி. கையில் பணமிருந்தால் குறைந்தது அரை ரூபாயாவது செலவு செய்திருப்பேன். பணமில்லாத தோஷம், ஹோட்டலில் பதார்த்தங்கள் சாப்பிடுவதற்குப் பதில், அவைகளினின்றும் வந்த நெய்யின் வாசனையை நுகர்ந்து திருப்தியடைய வேண்டியதாயிற்று என் தலையெழுத்து.

நான் சுமார் கால்மணி நேரம் டிக்கட்டு கலெக்டர்களின் அருகே போகாதபடியே பிளாட்பாரத்திலேயே இப்படியும் அப்படியும் போய்க்கொண்டிருந்தேன். கடைசியில் வண்டி செங்கல்பட்டை விட்டுப் புறப்பட்டது. அது சிறிது வேகமாகப் போய்க்கொண்டிருக்கும்போது நான் மீண்டும் புகைவண்டியில் ஏறிக்கொண்டேன். என்னதிர்ஷ்டம் நான் கதவு பூட்டப்பட்ட பெட்டியில் தானா ஏற வேண்டும்? நல்லகாலமாக நான் காலடிப் பாதையில் நின்றுகொண்டு எப்படி உள்ளே நுழைவது என்று ஆலோசித்துக் கொண்டிருப்பதையும், பெட்டிக் கதவு பூட்டப் பட்டிருப்பதையும், எவரும் கவனிக்கவில்லை. கவனித்திருந்தால் என்னைக் கையைப் பிடித்து இழுத்து கீழே யிறக்கி யிருப்பார். நானும முன்னாலோசனையுடன், புகைவண்டி பிளாட்பாரத்தைக் கடக்கும் வரையில் கதவைத் திறக்க முயல்வதுபோலப் பாசாங்கு செய்து கொண்டே இருந்தேன். பிளாட்பாரம் கடந்ததும் மெல்லென தலையை ஜன்னல் வழியாக உள்ளே விட்டேன். தலை யாதொரு கஷ்டமும் இல்லாமல் உள்ளே நுழைந்தது. ஆயினும் உடம்பு அவ்வாறு செய்யவில்லை ஸ்தூல சரீரம். ஹோட்டல்காரனின் தொப்பையில் பாதி யிருக்கும். ஆகையால் ஜன்னலில் என் நடுப்பாகம் சற்று சிக்கிக் கொண்டது. ஆயினும் ஒரு கனவான் பெரிய மனத்துடன் என்னை யிழுத்ததால், இரண்டு மூன்று கீறல்கள் தவிர்த்து வேறு அங்கஹீனங்கள் பெரும்பாலும் தலையை உடைத்துக் கொள்ளாமலும் உள்ளே போய்ச் சேர்ந்தேன். அதற்குள் ஒரு யுகமாவது முடிந்திருக்கும். என்னை உள்ளே இழுத்துப் போட்ட கனவான் ரெயில்வேயில் பிரயாணஞ் செய்வதைப்பற்றி எனக்கு ஒரு பிரசங்கம் செய்தார். அவருடைய அதிகப் பிரசங்கமும், வேண்டாத புத்திமதிகளும் முடிவதற்குள் புகைவண்டி தாம்பரம் ரெயில்வே ஸ்டேஷனில் வந்து நின்றது.

தாம்பரம்

தென்னிந்தியா ரெயில்வே கம்பெனியார் மின்சார வண்டிகள்விட ஆரம்பித்த பின்னர் புகை வண்டிகள் சாதாரணமாக தாம்பரத்திற்குப் பிறகு சென்னையில் தான் நிற்கின்றனவென்றும், சென்னைக்குப் போகும் பிரயாணிகளின் சீட்டுகளை யெல்லாம் அந்த ரெயில்வே ஸ்டேஷனிலேயே வசூலித்து விடுகின்றனர் என்றும் எனக்குத் தெரியும். ஆகவே, என்னிடம் பிரயாணச் சீட்டு இல்லை யென்பதை அந்த ஸ்டேஷனில் கண்டு பிடித்து விடுவர் என்று அஞ்சினேன். அவர்கள் கண்டு பிடித்து விட்டால், கட்டாயம் என்னைப் புகை வண்டியினின்றும் இறக்கி விடுவர். பிறகு சென்னைக்கு நடந்துபோக வேண்டியதுதான். பகலாக இருந்தாலும் பாதகமில்லை. இராக் காலத்தில் இறக்கி விட்டால் என்ன செய்வது? வயிறு பசியால் வாடும் பொழுது இருபது மைல் நடப்பது சாத்தியமா? ஆகையால் நான் புகை வண்டியிலிருந்த கக்கூஸில் ஒளிந்து கொள்வது என்று தீர்மானித்துக் கொண்டேன். அதனின்றும் வந்த துர்க்கந்தத்தை எவ்வாறோ சகித்துக்கொண்டு ராமத்தியானம் செய்ய வாரம்பித்தேன். என் மார்பு எவ்வளவு படபடவென்று அடித்துக்கொண்டது தெரியுமா? வயிற்றுள் துவாரஞ் செய்து, மார்பின் பின்னால் ஒரு கோணி நெல்லைக் கொட்டியிருந்தால், நெல்லெல்லாம் குத்து தாளாமல் அரிசியாக மாறியிருக்கும்.

கடைசியில் டிக்கட்டு கலெக்டர் உள்ளே வந்தான். என் மார்பு முன்னையை விடப்பன்மடங்கு அதிகப்பலமாகஅடித்துக்கொண்டது. தாழ்ப்பாளை நன்றாக அழுத்தினேன். பேச்சு மூச்சு இல்லாமல் அந்தத்துர்க்கந்தத்தை நுகர்ந்து கொண்டு உட்கார்ந்திருந்தேன். இருமல், தும்மல் முதலியவைகளுக்கெல்லாம் ஒரு கெட்ட பழக்கம் இருக்கிறது. அவைகள் எப்பொழுது வரவேண்டாம் என்று நாம் எண்ணுகிறோமோ,— அப்பொழுதுதான் அவைகள் வரும். அதுவும் சரியான சகுனம் பார்த்து. எனக்கோ தும்மல் வரும் போல இருந்தது. நான் என்னாலான மட்டும் அதை யடக்கிப் பார்த்தேன். முடியவில்லை. உடனே தும்மினால் தான் உயிர்தங்கும்போல இருந்தது. இல்லாவிடில் தலை வெடித்து விடும் என்று நான் சந்தேகித்தேன். கடைசியில் தும்மினேன். அதுவும் ஒரு தரமா, இரண்டு தரமா? சுமார் இருபது இருபத்தைந்து தரம். ஒருக்கால் சிதம்பரத்திற்குப் போய் சுவாமியைக் கும்பிட்டதால் யான் அடைந்த பலன் ஜலுப்புத்தானோ என்னவோ.

டிக்கட் பரிசோதகர்

“டப், டப், டப்.”

“யாரது?” என்று யாரோ கக்கூஸ் கதவைத் தட்டும் சப்தம் கேட்டதும் நான் வினவினேன்.

“சார், டிக்கட்டு கொடுங்கள்.”

“வந்து தருகிறேன். சற்று இருங்கள்,” என்றேன் நான்.

டிக்கட்டு கலெக்டர் கலியாணமானவன் போல இருக்கிறது. இல்லாவிட்டால் அவ்வளவு பொறுமையுடன் சிறிது நேரம் காத்திருந்து மறுமுறை கதவைத் தட்டியிருக்கமாட்டான். நான் ஆலோசித்தேன். அவனைக் காத்திருக்கச் சொன்னால், அண்டம் அழியும் வரையில் அவ்விடத்திலேயே உட்கார்ந்திருப்பான் என்று நான் சந்தேகித்தேன்.

ஆகையால் வேறு ஏதேனும் வழி கண்டு பிடிப்பதென்று தீர்மானித்துக்கொண்டேன். கதவைத் திறக்க முயலுவதுபோல் சப்தம் செய்துவிட்டு, “கதவைத் திறக்க முடியவில்லை சார்,” என்றேன் நான்.

“மேல் தாழப்பாளைக் கழட்டிவிட்டு, பிறகு கதவை யிடித்துப் பாரும்,” என்றார் அவர்.

அரை மனங்கூட இல்லாமல் ஒரு காரியத்தைச் செய்ய பிரயத்தனப்பட்டால் எந்தக் காரியந்தான் கைகூடும்? முடியவில்லை.

“நன்றாக இடியுங்கள் சார்”, என்று சொன்னான் டிக்கட்டு உத்தியோகஸ்தன்.

நான் பிரயத்தனப் பட்டேன். ஆனால் உண்மையிலேயே தாழ்ப்பாள் அழுத்தமாக இருந்தது. எனக்கு அச்சம் உண்டாயிற்று. ஒருக்கால் சென்னையடையும் வரையில் தாழ்ப்பாள்களைத் திறக்க முடியாமற் போய்விடுகிறதோ என்னவோ. ஏற்கனவே அந்த இடத்தில் இருந்தது வயிற்றைப் பிரட்டிப் பிடுங்கியது. சென்னை வரையில் அப்படியே கக்கூஸில் பிரயாணஞ் செய்யவேண்டி நேரிட்டால் மரணந்தான் சித்திக்கும். ஆகையால் முழுமனத்துடன் தாழ்ப்பாள்களைத் திறக்க முயன்றேன். அந்தோ, முடியவில்லை.

என் விடுதலை

எனக்கு உண்டான அச்சம் டிக்கட்டு கலெக்டருக்கும் உண்டாகியிருக்க வேண்டும். இல்லாவிடில் அவ்விடத்தினின்றும் ஆபீசுக்குப்போய் ஸ்டேஷன் மாஸ்டரையும் ஒரு தச்சனையும் அழைத்து வந்தான். தச்சன் பார்த்தான். கதவை யுடைத்தால்தான் என்னை விடுவிக்க முடியும் என்று சொன்னான். அதன் பிறகு, ஸ்டேஷன் மாஸ்டரின் உதவியின் பேரில் கதவு உடைக்கப்பட்டது. நான் விடுவிக்கப்பட்டேன். அப்பொழுது டிக்கட்டு கலெக்டர் என்னைப் பிரயாணச் சீட்டு கேட்டு விடுகிறானோ என்னும் அச்சம் எனக்கு உண்டாயிற்று. அந்தக் கஷ்டத்தை யொழிக்க உத்தேசித்து, கக்கூஸினின்றும் வெளியே வந்ததும், “ஐயையோ, என் கைப்பெட்டியைக் காணோமே” என்று அழவாரம்பித்தேன். அவர்கள் நான் சொன்னது உண்மைதான் என்று எண்ணினர். போலீஸாரை வரவழைத்தனர். அவர்களிடம் முறையிட்டுக் கொள்ளும்படி ஸ்டேஷன் மாஸ்டர் சொனனார். நான் அவ்வாறே வருணித்தேன். நான் வைத்திராத பெட்டி காணமற் போயிற்று என்று சொல்லி அதனை வருணித்தபோது நான் சொன்ன பொய்களுக்குக் கணக்கு வழக்குக் கிடையாது. அவைகளை யெல்லாம் போலீஸார் மிகவும் பிரயாசையுடன் குறித்துக் கொண்டனர்.

காணமல் போன மணி பர்ஸ்

அதன் பிறகு யாரும் என்னை டிக்கட்டு கேட்கவில்லை. சௌக்கியமாக வீடு வந்து சேர்ந்தேன். அன்று பகல் என்னுடைய மனைவி என்னை நோக்கி, “கிருஷ்ணயில் வாங்கணம். என்னவாவது பணம் கொடுங்கள்,” என்றாள்.

“என்னிடம் ஒரு தேயந்த காசுகூட இல்லையே.”

“ஜேபியில் மனிபர்சில் ரூ 5-3 அணா 4 தம்பிடி வெச்சிருக்கிறீர்களே?”

“நிஜமாகவா? பணப்பை எங்கே இருக்கது?”

“உங்கள் சட்டை ஜேபியில் உள்புறம். இந்தாருங்கோ, நீங்க வாங்கின டிக்கட்டுகூட இருக்கிறது,” என்றாள்.

அப்பொழுதுதான் எனக்கு என்னுடைய மடமைத்தனம இத்தன்மைத்தது என்பது தெரிந்தது. ஆயினும், நாம் பணப்பையை வைக்கும் இடங்கள் நம்மைவிட நமது மனைவிமாருக்குத்தானே அதிகம் தெரியும்.

களவுபோன பெட்டி

நேற்று எனக்குப் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து ஒரு பெட்டி வந்தது. நல்லகாலமாக அது என்னுடையதில்லை என்று உண்மையைச் சொல்லி, திருப்பி யனுப்பி விட்டேன். நல்ல காலம். நான் அந்த அற்பப் பெட்டிக்கு ஆசைப்பட்டிருந்தால் இன்னும் ஒரு மாதமாவது கோர்ட்டுக்குப் போகும்படி நேரிட்டிருக்கும்.

# மகாபாரதம்

## வனபர்வம்.

### வைதரிணீ ஸ்நாநம்.

விபாண்ட முனிவரின் ஆசிரமத்திலே சற்றுத் தங்கிய பின்னர், தருமபுத்திரர் முதலானோர் கங்கா ஸங்கமத்திற்குச் சென்றார்கள். அங்கிருந்து கடற்கரையோரமாகவே கலிங்க நாட்டிற்குச் சென்றார்கள். அங்கே லோமேசர், "இது தான் வைதாணீ நதியின் வடகரை" என்றும், "இங்கேதான் உருத்திரருக்குத் தனியாக யக்ஞபாகம் அளித்தார்கள்" என்றும் காட்டினார்; பாண்டவர்கள் நால்வரும் திரௌபதியும் வைதாணியில் ஸ்நானஞ் செய்து பிதுருக்களுக்குத் தர்ப்பணம் கொடுத்தார்கள். வைதரிணியிலே ஸ்நானஞ் செய்ததால் யுதிஷ்டிரருக்கு அபூர்வமான சக்தியுண்டாயிற்று. எல்லாவுலகங்களும் அவருடைய கண்முன் தோன்றின; பெரியோர்களான வைகானசர்கள் ஜபிக்கும் மந்திரவொலி அவருடைய காதுகளில் பட்டது; இவ்வதிசயத்தை அவர் லோமேசருக்குத் தெரிவித்தார். லோமேசரும், "தருமபுத்திரரே! இது பிரம்ம தேவருடைய வனம்; இதனைப் பிரம்மதேவர் காசியபருக்குத் தக்ஷிணையாகக் கொடுத்தார்; உடனே பூமாதேவி கோபித்துக்கொண்டு, "நீர் என்னை ஒரு மனிதனுக்குத் தானமாக அளித்தது தகாது; இந்தத் தானம் பயன்படாது!" என்று பாதாளத்திற்குச் சென்றாள்; ஆனாலும் காசிபப முனிவர் தவத்தாலே பூமாதேவியை மகிழ்விக்கவே, மீண்டும் ஜலத்தினின்று வெளிவந்து அவருடைய யாகசாலையில் வேதியாக விளங்குகிறாள். அதுதான் இதோ காணப்படுகின்ற வேதி. இதிலே ஏறி நிற்போர் வீரர்களாவார்கள்! ஸாகரத்தைக் கடப்பார்கள்! சாதாரண மனிதர்கள் இதின்மீது ஏறினால் வேதியோடு ஸமுத்திரத்திலே ஆழ்ந்து போவார்கள்! நீர் இதனைப் பார்த்து, "ஏ வேதியே! நீ பகவானுடைய அபிவியக்த ஸ்தானம் என்று அறிந்தேன்! என்னை அமிர்தமயமாக்குவாய்" என்று சொல்லிக்கொண்டே ஏறுவீராக" என்று லோமேசர் சொல்லி முடித்தார் தருமபுத்திரரும் அவ்வாறு கூறிக்கொண்டு வேதியின்மீது ஏறி நின்று சமுத்திரத்தைப் பார்த்து! "நீயே யக்ஞத்திற்கு சரீரம் ஆகின்றாய்! விஷ்ணு உன்னிடத்திலுள்ளார்; நீயே மோக்ஷத்திற்குச் சாதனம்" என்று ஸ்நானஞ் செய்தார். பின்பு அவர் மகேந்திர மலையை அடைந்து, அங்கு ஓரிரவு வசித்து மறுநாள் அங்குள்ள முனிவர்களையெல்லாம் வணங்கித் தொழுதார்; பின்பு பரசுராமரையே பின்பற்றி வசிக்கும் அகிருதவிரணர் என்பவரைப்பார்த்து, "நான் பரசுராமரைப் பார்க்க விரும்புகிறேன்!' என்று அறிவித்தார். அதைக்கேட்ட அகிருதவிரணர், "தருமபுத்திரரே! ஆத்ம ஞானமுள்ள பார்க்கவ முனிவராலே உம்முடைய வரவு முன்னாலேயே அறியப்பட்டது! அவருக்கு உம்மிடம் பிரீதி அதிகம்! அஷ்டமியிலும் சதுர்த்தசியிலும் இங்குள்ள முனிவர்களுக்கு அவர் காட்சி தருகிறார்! நாளையதினம் சதுர்த்தசியாகையால் நீரும் அவரை அப்போது கண்டு தரிசிக்கலாம்!" என்றார்.

சென்னைத் தொழிலாளர்களால் நடத்தப்பட்ட 'மே' தினக் கொண்டாட்ட ஊர்வலம். PPB

யுதிஷ்டிரரும் அந்த அகிருதவிரணரைப் பார்த்து, "ஐயா, நீர் எப்போதும் பார்க்கவரோடு வசிக்கிறீர்; உமக்குத் தெரியாததில்லை; பரசுராமர் ஏன் க்ஷத்திரியர்களோடு போர்புரிந்தார்? அவருடைய சரித்திரத்தை விரிவாகச் சொல்லவேண்டும்!" என்று பிரார்த்தித்தார் அகிருதவிரணரும் பின்வருமாறு சொல்லத் தொடங்கினார்:—

### பரசுராமர் சரித்திரம்.

"கேளும், தருமநந்தனரே! பரசுராமர் கார்த்தவீரியன் இவர்களுடைய கதையைச் சொல்கிறேன். கார்த்தவீரியார்ச்சுனன் என்பவன் ஹேஹபநாட்டுக்கு அரசன்; அவனுக்கு ஆயிரம் கைகள் இருந்தன.

அவனுக்கு தத்தாத்திரேயர் ஒரு தங்க விமானம் கொடுத்தார்; அது பத்துத்திக்கிலும் தடையின்றிச் செல்வது; அதின்மேலேறிச் சென்று, அந்த அர்ச்சுனன் சகல தேவர்களையும் யக்ஷர்களையும் ரிஷிகளையும் துன்புறுத்தினான். அவர்கள் எல்லோரும் விஷ்ணுவை அடைந்து "பகவானே! எங்களை நீர் தான் காத்து ரக்ஷிக்க வேண்டும். அர்ச்சுனன் தத்தாத்திரேயரிடம் வரத்தைப் பெற்றதால் உண்டான கொழுப்பினாலே எங்களை மிகவும் இமிசிக்கிறான்" என்று முறையிட்டார்கள். அதைக் கேட்டதும் விஷ்ணு பகவான் இந்திரனோடு ஆலோசித்து தம்மிடம் முறையிட்ட தேவர்கள் யக்ஷர்கள் ரிஷிகள் முதலானோருக்கு அர்ச்சுனனைச் சங்கரிப்பதாக வாக்குக் கொடுத்தார். பின்பு தம்முடைய தபோவனமாகிய பதரிகாசிரமத்திற்குச் சென்றார்.

### ஜமதக்னி, விச்வாமித்திரர் ஜனனம்

இந்த சந்தர்ப்பத்திலே கான்யகுப்சத்திலே காதி என்னும் மன்னன் அரசாண்டு வந்தான்; அவன் தன்னுடைய பெண்ணான சத்யவதியை ரிசீகர் என்னும் முனிவருக்கு விவாகஞ் செய்து கொடுத்தான். ரிசீகர் தம்முடைய தபோமகிமையாலே வருணனிடம் ஆயிரம் சிறந்த குதிரைகளைப் பெற்று அவற்றை கன்னியா சுல்கமாக காதி மன்னவனுக்குக் கொடுத்தார். அவர் அவ்வாறு குதிரைகளை வருணனிடமிருந்து பெற்ற இடம் அசுவதீர்த்தமென்று பிரசித்தி பெற்றது; தம்முடைய புத்திரரான ரிசீகரையும் மருமகளான சத்தியவதியையும் பார்த்துப் போவதற்காகப் ப்ருகு முனிவர் அங்கே வந்தார்; தம்பதிகள் அவரை வணங்கினார்கள்; ப்ருகு முனிவர் தம்முடைய மருமகளைப் பார்த்து "உன்னிடம் எனக்கு விசேஷமான பிரீதி ஏற்பட்டிருக்கிறது; நீ வேண்டிய வரங்களை அளிப்பேன்" என்றார்; சத்தியவதி "ஆரியரே! என் மாதாவுக்குப்புத்திரன் இல்லை. எனக்கும் புத்திரன் வேண்டுமென்ற ஆசை இருக்கிறது. எங்களிருவருக்கும் புத்திரப் பேற்றை அளிக்கவேண்டும்" என்று வேண்டினாள்; பிருகு முனிவரும் 'நான் விராட்புருஷனைத் தியானித்து இரண்டு சருக்களை தயாரித்து வைத்திருக்கிறேன் அவற்றுள் ஒன்றை நீ சாப்பிட்டு அத்திமரத்தை அணைந்து கொள்; உன்னுடைய தாயார் மற்றொன்றைச் சாப்பிட்டு அரசமரத்தை அணைந்து கொள்ளட்டும்' என்று கூறி சருவைக்களை தனித்தனியாகப் பிரித்துக் கொடுத்தார். ஆனால், சத்தியவதியின் தாய் தன் பெண்ணுக்குள்ள சருவைச் சாப்பிட்டு அத்திமரத்தை அணைந்தாள்; சத்தியவதியும் மற்றைச் சருவை யுண்டு அரசமரத்தை அணைந்துகொண்டாள்; இவ்வாறு இவர்கள் மாறுதலாகச் செய்ததை உணர்ந்த பிருகு முனிவர் சத்தியவதியைப் பார்த்து, "நீங்கள் மாறுதலாக நடந்து கொண்டீர்கள் அல்லவா? உனக்கு நான் அளித்த சருவினின்று பிராம்மணப்பிள்ளை பிறப்பான்; அதனை உன் தாய் உண்டதாலே அவளுக்கு பிராம்மணத் தன்மை யுடைய பிள்ளை பிறக்கும்; உன் தாய் வயிற்றிலே பிறப்பதற்குரிய க்ஷத்திரிய புத்திரன் உன் வயிற்றிலே பிறப்பான்" என்றார். சத்தியவதி அதைக் கேட்டு, திடுக்குற்று, "என் வயிற்றில் பிராம்மணத்தன்மையுடைய புத்திரனே பிறப்பதற்கு அருள்புரியவேண்டும்; அந்தப் புத்திரனுக்குப் புத்திரன் க்ஷத்திரிய குணமுள்ளவனானாலும் பாதகமில்லை" என்றாள். "அப்படியே ஆகட்டும்" என்று மருமகளை ஆசீர்வதித்து பிருகுமுனிவர் தம்முடைய ஆசிரமத்திற்குத் திரும்பச் சென்றார்.

பிறகு காதி மன்னனுக்கு விசுவாமித்திர முனிவரும் ரிசீக முனிவருக்கு ஜமதக்கினி முனிவரும் பிறந்தனர். ஜமதக்கினி முனிவர் அநேக வருஷங்கள் தவஞ் செய்து அதிக தேஜஸ் உடையவர் ஆனார்; நான்கு வேதங்களும் அவரால் நன்குணரப் பெற்றன; தனுர் வேதத்திலும் தேர்ச்சியடைந்தார்; அநேக திவ்விய அஸ்திரங்கள் அவருக்குக் கிடைத்தன; அவர் பிரசேனஜித்து என்னும மன்னனின் புதல்வியான இரேணுகையை மணஞ் செய்துகொண்டார். அவளிடம் ஐந்து புத்திரர்களைப்பெற்றார். பரசுராமர் ஐந்தாவது புத்திரர்; ஆயினும் அவரே தேஜஸ், வீரம், முதலியவற்றில் தலைசிறந்து விளங்கினார்.

### பிதாவின் உத்தரவு.

பின்பு ஒரு நாள் புத்திரர்கள் காய் கனி கிழங்கு முதலியவற்றைக் கொண்டு வருவதற்காகக்காட்டிற்குச்சென்ற பின், இரேணுகாதேவி வழக்கப்படி ஸ்நானஞ் செய்யச் சென்றாள். வழியிலே சித்திர

சந்தன் என்னும் அரசன் தன்னுடைய மனைவியுடன் ஜலக்கிரீடை செய்வதைக்கண்டு அவனிடம் ஆசைகொண்டாள். அவ்வாறு அவளுக்கு மனம் வேறுபடவே, பயந்து கொண்டே ஆசிரமத்திற்குத் திரும்பினாள். அவளைக் கண்டதும் ஜமதக்கினி முனிவர் அவள் மனம் வேறுபட்டதால் கற்பிழந்தாள் என்று அறிந்துகொண்டு, "சீ" என்று அவளை நிந்தித்து, தம்முடைய மூத்த பிள்ளை ருமண்வானைப் பார்த்து "உன் தாயைக் கொன்று விடு" என்று உத்திரவிட்டார்; ருமண்வானுக்குத் தாயைக் கொல்ல மனம் துணியவில்லை; பின்பு கோபங்கொண்ட அந்த முனிவர் இரண்டாவது பிள்ளையான சுஷேணனையும் மூன்றாவது பிள்ளையான வசுவையும் நான்காவது பிள்ளையான விசுவாசுவையும் அவ்வாறே ஏவினார்; அவர்களும் உடன்படவில்லை; இவர்களை யெல்லாம் ஜமதக்கினி முனிவர் சபித்து விட்டார்; அவர்கள் நால்வரும் தேஜஸையும் புத்தியையும் இழந்து ஜடப்பொருளுக்குச் சமானமானார்கள். பிறகு கடைசிப் பிள்ளையான ராமரைப் பார்த்து "உன் தாயைக் கொன்று விடு" என்று ஏவினார்; தந்தையாரின் உத்திரவுப்படியே ராமர் கோடாரியாலே தாயின் தலையை வெட்டி வீழ்த்தினார். ஜமதக்கினி முனிவரின் கோபம் தணிந்ததும் அவர், ராமரைப்பார்த்து "நீயே புத்திரன்; பிதாவின் ஆணையில் நிற்பவன்; உனக்கு வேண்டிய வரங்களைக்கேள்" என்றார். ராமரும் "தந்தையே! என் தாய் மீண்டும் உயிர்பெற வேண்டும்; நான் அவளை வதஞ்செய்ததை அவள் உணராதிருக்க வேண்டும்; தாயைக்கொன்ற பழி என்னைச் சேராதிருக்கவேண்டும்; என் தமையன்மார்கள் இழந்த புத்தியையும் தேஜஸையும் மீண்டும் பெறவேண்டும்; எனக்கு அதிக ஆயுளும் யுத்தத்திலே எப்போதும் வெற்றியும் வேண்டும்" என்று அநேக வரங்களைக் கேட்டு அவைகளை யெல்லாம் பெற்று தந்தையோடும் தாயோடும் சகோதரர்களோடும் இனிது வாழ்ந்து பராக்கிரமத்தோடு விளங்கினார்.

### கார்த்தவீர்யன் வதம்

இவ்வாறாக, ஒரு நாள் ராமரும அவருடன பிறந்தவர்களும் இல்லாத சமயத்திலே கார்த்தவீரியார்ச்சுனன் ஜமதக்கினியின் ஆசிரமத்திற்கு வந்தான்; மன்னனுக்குரிய வாறு கௌரவஞ் செய்தும் அந்த அர்ச்சுனன ஜமதக்கினி முனிவருடைய யாகப்பசுவின் கன்றை அபகரித்துக்கொண்டு ஆசிரமத்திலுள்ள மரம் செடி முதலியவற்றையும் முறித்தெறிந்து விட்டுப் போனான். காட்டிலிருந்து திரும்பிவந்த ராமர் தம்முடைய தந்தையார் வருந்துவதையும் யாகப் பசு கன்றினைக் காணாமற் கதறுவதையும் பார்த்து அர்ச்சுனனைத் துரத்திக்கொண்டு போய், அவனோடு யுத்தம் செய்து, தம்முடைய பாணங்களாலே அவனுடைய ஆயிரம் கைகளையும் அறுத்து, அவனையுங்கொன்றுவிட்டார்; இதைக் கேட்டு அர்ச்சுனனுடைய புத்திரர்கள் ராமரில்லாத சமயத்திலே ஜமதக்கினியின் ஆசிரமத்திற்கு வந்து அவரைக் கொன்று விட்டார்கள். ஆசிரமத்திற்குத் திரும்பிவந்த ராமர் தம்முடைய செயலுக்குப் பிரதியாக அர்ச்சுனனுடைய புத்திரர்கள் தம்முடைய தகப்பனாரைக் கொன்றதைக்கண்டு கோபங்கொண்டு, "அந்தப் பாபிகளையும் மற்ற க்ஷத்திரியர்களையும் கொன்று பழி தீர்ப்பேன்" என்று சபதம் செய்தார்; அப்படியே அர்ச்சுனனுடைய புத்திரர்களையும் அவர்களுக்குத் துணையாக வந்த க்ஷத்திரியர்களையும் யுத்தத்திலே கொன்றுவிட்டார். இவ்வாறு இருபத்தொரு முறை பூமியிலுள்ள துஷ்ட க்ஷத்திரியர்களையெல்லாம் வதஞ்செய்து அவர்களுடைய ரத்தத்தால் ஸமந்த பஞ்சகம் என்னும் இடத்தில் ஐந்து மடுக்களை நிரப்பினார். அந்த ரத்த மடுக்களிலே தம்முடைய பிதுருக்களுக்கு ராமர் தர்ப்பணம் செய்தார்; பின்பு பரசுராமர் பெரிய யாகம் ஒன்றைச் செய்து முடித்துத் தாம் யுத்தத்தில் வென்றுகொண்ட பூமியை யாகத்தைச் செய்து கொடுத்த முனிவர்களுக்குத் தானஞ் செய்தார். காசியப முனிவருக்கு இந்தத் தங்கவேதியைத் தானமாகக் கொடுத்தார். காண்டவாயனர்கள் என்னும் அந்த முனிவர்கள் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட பூமியைக் கண்டம் கண்டமாகப் பங்கிட்டுக் கொண்டனர். காசியபருள்ளிட்ட முனிவர்களுக்குப் பூமியை எல்லாம் கொடுத்து விட்டு பரசுராமர் இங்கு மஹேந்திர பர்வதத்தில் தவஞ் செய்கிறார்."

### தீர்த்த யாத்திரை.

இந்தக் கதையைக் கேட்டபின், மறுநாள் சதுர்த்தசியன்று தருமபுத்திரரும் தம்பிமார்களும் மற்றவர்களும் பரசுராமரைத் தரிசித்தனர்; அன்று மஹேந்திர பர்வதத்திலே வசித்து விட்டு, மறுநாள் எல்லோரும் தென் திசை நோக்கி தீர்த்த யாத்திரையாகப் புறப்பட்டனர்.

கடலோரத்திலுள்ள தீர்த்தங்களையும் க்ஷேத்திரங்களையும் தரிசித்துக் கொண்டே, தருமபுத்திராதிகள் பிரசஸ்தை என்னும் நதிதீரத்தை அடைந்தார்கள்; அங்கிருந்து கோதாவரிக் கரையை அடைந்தார்கள்; பின்பு அகஸ்திய தீர்த்தம், நாரீ தீர்த்தங்களையும் அடைந்தார்கள். அவ்விடங்களிலே அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை செய்தபோது செய்த தானங்களைக் கேள்விப்பட்டு தருமபுத்திரர் மனமகிழ்ந்தார். பின்பு அவர்கள் எல்லோரும் சூர்ப்பாரகத்திற்குச் சென்றார்கள். கடலுக்கு அப்பாலுள்ள அந்த வனத்திலே முன்பு தேவர்கள் தவஞ் செய்தார்களாம்; பின்பு அரசர்கள் பல யாகங்களைச் செய்தார்கள். அங்கே பரசுராமருடைய வேதியையும் சகல தேவர்களுக்கும் ஏற்பட்டுள்ள கோயில்களையும் தரிசித்தார்கள். பின்பு தரும புத்திரர் தம்பிமார்களோடும் திரௌபதியோடும் முனிவர்கள் பிராம்மணர்கள் முதலானவர்களோடும் பிரபாஸ தீர்த்தத்திற்குச் சென்றார்; கிருஷ்ணையிலே பிதுருக்களுக்குத் தர்ப்பணஞ் செய்தார். பின்பு பன்னிரண்டு நாள் வாயு பக்ஷராய் தீர்த்தத்தை மட்டும் பருகி உணவில்லாமல் பஞ்சாக்கினி மத்தியிலே தவமிருந்தார். அவ்வாறு தவமிருப்பதை பலராமரும் கிருஷ்ணரும் கேள்விப்பட்டு விருஷ்ணி வமிசத்து வீரர்களோடு அவரைக் காண வந்தார்கள். பூமியிலே சயனித்தும் விரதம் பூண்டும் மலினமான தேகங்களையுடைய பாண்டவர்களையும் திரௌபதி தேவியையும் கண்டதும் விருஷ்ணி வீரர்கள் துயரமடைந்தார்கள்; தருமபுத்திராலே உபசரிக்கப்பட்ட அந்த வீரர்கள் அர்ச்சுனன் வனத்திலே தவமிருந்து அஸ்திரங்களைப்பெற்று தேவலோகஞ் சென்றிருப்பதாக அறிந்து கொண்டார்கள்.

### பாண்டவர்களும் விருஷ்ணி வீரர்களும்'

விருஷ்ணி வீரர்கள் பிரபாஸ தீர்த்தத்திலே தங்கின பாண்டவர்களைக் கண்டு அவர்களுடன் சிலகாலம் தங்கியிருந்தார்கள். ஒருநாள் பலராமர் கிருஷ்ணரைப் பார்த்து, "தருமம் ஒருவனுக்கும் நன்மை பயப்பதில்லை; அதருமமும் தீமை பயப்பதில்லை; யுதிஷ்டிரர் மரவுரி தரித்துக் காட்டிலே திரிவதையும் துரியோதனன் பூமியை ஆள்வதையும் பார்த்தாயா? இதைக்கண்ட பிரஜைகளுக்கு தருமம் அதருமம் இவைகளுள் எது நல்லது என்ற சந்தேகம் உண்டாவது சஹஜம் அன்றோ? தருமபுத்திரர் காட்டுக்குச் செல்வதை எவ்வாறு பீஷ்மர் கிருபர் துரோணர் முதலானோர் பார்த்துக்கொண்டிருந்தார்கள்; திருதராஷ்டிரரைத்தான் நிந்திக்கவேண்டும். அவர் சீக்கிரத்திலே புத்திரர்களுடன் நாசமடைவார் என்பது நிச்சயம். இந்த வனவாசத்தால் ஏற்பட்ட கஷ்டங்களை நினைத்து பீமசேனன் தார்த்தராஷ்டிரர்களை அடியோடு அழித்துவிடுவான்; இவன் கீழ்தேசங்களிலுள்ள அரசர்களை யெல்லாம் வென்றவனன்றோ? அப்படியே சகாதேவனும் தென் திசைமன்னர்களை வென்றவன். நகுலனும் மேற்குத் திசையிலுள்ள அரசர்களை வென்றவன். இவர்களோ இவ்வாறு காட்டில் அலைந்து திரியத்தக்கவர்கள்? யாககுண்டத்திலே பிறந்து பதிவிரதைகளுள் சிறந்தவளாக விளங்கும் இந்தத் திரௌபதி இவ்விதக் கஷ்டங்களை அநுபவிப்பது தகுமோ?' என்று விசனித்தார்

(தொடரும்.)




## நவநாகரீகக் குறிப்புகள்

(காசினி எழுதியது)

### 'பாயிலர் ஸூட்'

* * * நீ கேட்டிருக்கும் மாதிரி உடைக்கு 'பாயிலர் ஸூட்' என்று பெயர். இதற்கு சாதாரணமாகத் தோளில் பொத்தான் வைத்திருக்கும். நிஜாரும் மேல் சட்டையும் ஒரே துணியில் வெட்டப்பட்டிருப்பதால் நிஜாருக்கு குச்சுப் பிடிக்கமுடியாது. குழந்தைகளுக்கு ஓடி ஆடி விளையாட 'ராம்பர் ஸூட்' மாதிரியில் நிஜாரில் குச்சுப் பிடித்திருந்தால் தான் சௌகரியமாக இருக்கும். அதற்கு நிஜார் வேறு, பாடி வேறாக வெட்டித் தைத்தால்தான் முடியும். எனக்கு என்னமோ இந்த 'பாயிலர்ஸூட்' குழந்தைகளுக்கு அவ்வளவு ஏற்ற உடையாகத் தோன்றவில்லை. உள்ளே இடுப்புக்குக் கீழ் வரையில் வரும்படி ஒரு 'செமி' போட்டுவிட்டு அதன்மேல் பாயிலர் ஸூட்டைப் போடவேண்டும். இதற்கு மேல் சட்டை போடுவது நாகூக்கில்லை. பெரிய கட்டங்கள் விழுந்த துணிகளிலும், 'செக்' மாதிரியான துணிகளிலும் இதைத் தைக்கலாம். ஆண் குழந்தைகள், பெண்குழந்தைகள் இருவருக்கும் இதைப் போடலாம். சகஜமாகவே நாலைந்து வயது வரையில் ஆண் குழந்தை, பெண் குழந்தை என்ற பேதத்தை உடுப்புத் தைப்பதில் அதிகம் பாராட்டுவது வழக்கமில்லை ஒரே மாதிரியான உடைகள் தான் போடுகிறார்கள். நீ உன் மருமகன், பேத்தி இருவர்களுக்கும் 'ராம்பர் ஸூட்டே'தை. கஜம் நாலணா ஐந்தணாவுக்கு 'செக்' மாதிரியில் 'ராம்பர் ஸூட்டுக்கு' ஏற்ற சுதேசித் துணிகள் எத்தனையோ தினுசில விற்கின்றன. இவைகளை வாங்கித் தைத்துவிடு. பார்ப்பதற்கும் நன்றாக இருக்கும்; குழந்தைகளுக்கும் சௌகரியமாக இருக்கும்.

### கடப்பைப் புடவை.

கடப்பையில் நெய்யப்படும் ஒரு தினுசு நூல் புடவை அன்று விலைக்கு வந்திருந்தது; ஒரு வியாபாரி மூட்டை புடவைகள் கொண்டு வந்திருந்தான். இந்தப் புடவைகள் எட்டு, ஒன்பது கஜ நீளங்களில் இருந்தன. நான் ஒன்பது கஜப் புடவை ஒன்று வாங்கினேன். நல்ல கப்புநிறச் சிகப்பு; கரைக்குப் பச்சையும் வெள்ளையும் கலந்து பூமாதிரியில் அழகாக வேலை செய்திருந்தது; பூன தலைப்பு. விலை ஆறரை ரூபாய்கள் ஆச்சுது. கரையில் வேலைப்பாடு அதிகமாக இருப்பதால் இந்தப் புடைவைகளுக்குச் சற்று விலை ஜாஸ்தி என்று அந்த வியாபாரி சொன்னான். துணி நெசவு வழ வழப்பாக நன்றாக இருக்கிறது. வலை வலையாகவும் இல்லை; மெல்லியதாகவும் இருக்கிறது. நெசவு நெருக்கமாக இருப்பதால் இந்தப் புடவையை உள் உடை கட்டாமலே கட்டலாம். துவைத்தாலும் சாயம் போகவில்லை. துணியும் சில துணிப் புடவைகள் போல் அடை அடையாக ஒன்று சேர்ந்து ஒட்டிக்கொள்ளவில்லை. அடுத்த வாரம் இன்னும் பல தினுசுப் புடவைகள் கொண்டு வருவதாக அந்த வியாபாரி சொல்லிப் போயிருக்கிறான். அதற்குள் உன்னிடமிருந்து பதில் கிடைத்தால் உனக்கும் ஒரு புடவை வாங்கி அனுப்புகிறேன். இந்தத் துணிப்புடவைகள் தினுசுகளுக்குத்தான் இந்த நாளில் கணக்கே இல்லையே? வேனில் உடைக்காகப் போன மாதம் நாங்கள் வாங்கின துணிப்புடவைகள் வகைகளைப் பார்த்த என் அத்தை, 'அம்மா, அரை ஆயிரம் உடுத்தும் என்று நம்மவருள் ஒரு வசனம் உண்டு; இந்த நாளில் உங்கள் விஷயத்தில் அது முழுவதிலும் வாஸ்தவமாகத்தான் இருக்கிறது. நீங்கள் நிஜமாகவே உங்கள் வாழ்நாளில் ஆயிரம் புடவைகள் உடுத்தி விடுவீர்கள் போலிருக்கிறதே! காலத்தின் கோலம்!' என்றாள்.

### புனத்தலைப்பு

இப்பொழுது பட்டுப் புடவைகளுக்கும் ஒரு தலைப்பு பங்களூர் தலைப்பாகவும் ஒரு பக்கம் •புனத்தலைப்பாகவும் போடுகிறார்கள். புனத்தலைப்புக்குப் பச்சையும் வெள்ளையுமாகவாவது அல்லது சிகப்பும், பச்சை, அல்லது வெள்ளையுமாகவாவது பட்டைகள் போடுகிறார்கள். லேடி சின்னையா போன மாதம் ஒரு புடவை சொல்லி நெய்து கொண்டாள். உடல் ஒரு வித அரக்கு. உடலில் ஒரு தினுசான ஊதாவில் நெருங்கின கட்டடங்கள் போட்டிருந்தது. ஒரு தலைப்புப் பூனத் தலைப்பு; மற்றொன்று பங்களூர் தலைப்பு. கரை சாணகலம் மஞ்சள் கரை. கரையில் சரிகை நெளியும் தலைப்பில் சரிகைக் கோடுகளும் போட்டிருந்தது. புடவை எழு கஜம் புடவை. விலை நாற்பது ரூபாய்களாச்சுது. இந்தப் புடவைக்குத் தலைப்பு அதிக நீளமில்லாமல் குட்டையாகவே இருந்தது. தற்காலத்தில் அநேகர் முந்தாணியைச் சொருகுவதில்லை; தலைப்பைத் தொங்கவிட்டுக் கொள்ளுவது தான் தற்காலத்தில் நாகரீகமாகக் கருதப்படுகிறது. ஆனதினால் அநேகமாக எல்லாரும் தலைப்புக்குட்டையாக இருக்க வேண்டும் என்றே பிரியப்படுகிறார்கள். இல்லா விட்டால் எத்தாப்பு வரையில் தலைப்பு இருப்பதால் அது பார்வைக்கு அவ்வளவு நன்றாக இருப்பதில்லை. தலைப்பைச் சொருகிக் கொள்ளுபவர்களும் குட்டைத்தலைப்புக்குத் தான் ஆசைப்படுகிறார்கள். குட்டைத் தலைப்புக்களாக, ஒரு தலைப்புப் பூனத்தலைப்பு, மற்றொன்று பங்களூர் அல்லது



இங்கிலாந்தில் மாக்ஷிமை தங்கிய ஜியார்ஜ் சக்ரவர்த்தியும் மேரிமகாராணியும் ஆல்டர் ஷாட்டில் ராணுவங்களைப் பார்வையிட்ட போது 'ஸர்ச்லைட்' விளக்குக் கருவியைப் பரீக்ஷித்தார்கள். ppA

சாதாரத்தலைப்பாகப் போடுவது தான் இப்பொழுது நாசூக்காக எண்ணப்படுகிறது. லேடி சின்னையா வாங்கின புடவை எடுப்பாகவும் நன்ருகவும் இருந்தது. அந்தப்புடவையில் போட்டிருந்த ஊதாக் கட்டடங்கள் ஒரு புது மாதிரியாகத்தான் இருந்தது. கடைக்காரன் புது மோஸ்தர் என்று ஒரு பாவாடைத் துண்டைக்காட்டினுன்; அதைப்பார்த்து விட்டுத்தான் லேடி சின்னையா அதே மாதிரியில் தனக்குப் புடவை நெய்யச் சொன்னுள். அந்தப் புடவை அவளுக்கு அழகாகவும் பொருத்தமாகவும் தான் இருந்தது. எல்லாருக்குமே அந்த வர்ண அமைப்பு நன்ருக இருக்குமா என்பது சந்தேகம் தான்.

பிரண்டை வடாம்.

பிரண்டை ஜலத்தில் அரிசி மாவைக் கரைத்துக் கிண்டிச் செய்யும் வடாத்துக்குத்தான் பிரண்டை வடாம் என்று பெயர். அரிசியை நன்ருகக் குத்திப் புடைத்து, முத்துப் போல் களைந்து, வடியவைத்துப் பிறகு உரலில் போட்டு இடிக்கவேண்டும். 'மெஷினில்' கொடுத்தோ அல்லது எந்திரத்தில் போட்டோ திரிக்கவும் செய்யலாம். அப்படித் திரிப்பதாக இருந்தால் களைந்த அரிசியை நன்ருக உலர்த்தி விடவேண்டும். பிறகு மாவை ஒரு தரம் சலித்து எடுத்துக் கொள்ளவேண்டும். ஏதாவது நூசி தும்பு முழு அரிசி இவைகள் இருந்தால் ஜல்லடையில் நின்றுவிடும். ஒருப்படி அரிசிக்கு ஒரு பிடி பிரண்டை என்ற கணக்கில் பிரண்டையை நறுக்கி அளந்து, உரலில் போட்டு இடிக்க வேண்டும். பிரண்டையை இஷ்டமானல் இன்னும் கூடவும் போடலாம். இடித்த பிரண்டையை ஒரு கரண்டியினுல் ஒரு ஈயம் பூசின பாத்திரத்தில் போட்டு, கரண்டியால் நன்ருக மசித்து பிரண்டைஜலத்தைத் துணியில் வடிக்கட்டி எடுத்துக்கொள்ளவேண்டும். மீந்திருக்கும் சக்கையை மறுபடியும் இடித்து ஜலம் விட்டுக் கலந்து வடிக்கட்டிக் கொள்ளவேண்டும். பிறகு ஒரு படி மாவுக்கு மூன்றுபடி ஜலம் என்ற கணக்கில் மாவும், பிரண்டை ஜலமும், போதாதற்கு வேறு ஜலமும் விட்டு நன்ருகக் கட்டிகள் இல்லாமல் கரைத்து அடுப்பில் வைத்துக் கூழ் காய்ச்சவேண்டும், கூழைக் கை விடாமல் துழவ வேண்டும். கூழ் கெட்டியாகி முதலில் ஓரங்களில் கொதிக்கும். பிறகு நடுவில் கொதிக்கும். நன்ருக நடுவில் கொதி வரும் வரையில் கூழைக் காய்ச்ச வேண்டும். கூழ் நடுக் கொதி வருமுன் கெட்டியாகி விட்டால் அதில் இன்னும் கொஞ்சம் ஜலத்தை விட்டுக் கிளற வேண்டும். பிறகு கூழில் கொஞ்சம் பெருங்காய ஜலமும், சீரகமும் போடவேண்டும். உப்பை முதலிலேயே போட்டு விடலாம். சுத்தமான துணியில் ஒரு சிறிய கரண்டியால் சிறிய சிறிய வட்டங்களாகக் கூழைவிட வேண்டும். வடாம் அரையணு அகலம் இருந்தால் போதும். இது நன்ருகக் காய்ந்து துணியுடன் ஒட்டிக்கொள்ளும். பிறகு துணியின் பின் பக்கத்தில் கொஞ்சமாக ஜலத்தைத் தெளித்துச் சிறிது நேரம் ஊறவைக்கவேண்டும். ஊறினதும் வடாத்தைச் சுலபமாகத் துணியை விட்டு உரித்தெடுத்துவிடலாம். பிறகு தட்டுகளிலோ, அல்லது பாயிலோ போட்டு வடாத்தை நன்ருக உலர்த்த வேண்டும். சாதாரணமாகத் துணியில் இரண்டு நாளும், எடுத்த பின் ஒரு நாளும் இந்த வாடத்தை உலர்த்த வேண்டி வரும். கூழை நடுக் கொதி வருவதற்கு முன் இறக்கிவிட்டால், வாடம் தூள் தூளாகப் பொரிந்து விடும். துணியைவிட்டு உருட்படியாக எடுக்க முடியாது. பிரண்டை ரசத்தைக் கையால் தொடாமல் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் பிரண்டை ரசம் பட்டுவிட்டால் கை பசபச வென்று அரிக்கும். 'பிரண்டையைப் போல் அரிக்காதே" என்ற வசனம் உனக்குத் தெரிந்திருக்கலாம். பொரித்த பிரண்டை வடாம் கரகரப்பாகவும், ருசியாகவும் பார்வைக்கு வெளுப்பாகவும் இருக்கும்.





ஜோதிர்மண்டலம்

(461-ம்பக்கம் தொடர்ச்சி.)

மேற்கு வானத்தில் மிகவும்பிரகாசமாக சுக்ரன் தோன்றும். இது இம்மாதம் 19-ம் தேதி யன்று (22-5-32) அதிக ப்ரகாசத்தை யடைகிறது. 1930-ம் வருஷம் டிசம்பர் மாதத்தில், சுக்கிரன் 'காலை நக்ஷத்திரமாக' இருந்து, மிகவும் பிரகாசத்தை யடைந்த காலத்தில் பகலில் 12-மணிக்குக் கூட நம் பார்வைக்குப் புலப்பட்டது அநேகருக்கு ஞாபகமிருக்கலாம். அதே மாதிரியாக, இப்பொழுது, சுமார் பிற்பகல் 3-மணி முதலேயே வானத்தில் இது தோன்றினுல் ஒரு அதிசயமுமில்லை.

குஜன்:—இம்மாத முழுவதும் மீனத்திலேயே யிருந்து, ஆனி மாதம் முதல் தேதி யன்று மேஷத்திற்கு மாறுகிறது.

குரு:—இம்மாத முதலில் கடகத்திலிருந்து 19-ம் தேதி யன்று (1-6-32) சிம்மக் கூட்டத்திற்குச் செல்கிறது. இது பிரகாசத்தில் சுக்கிரனுக்கு அடுத்து இருக்கிறது.

சனி:—மகரத்தில் இருக்கிறது. நடு இரவுக்குப் பிறகு கிழக்கில் இதைக் காணலாம். சனி இம்மாதம் 2-ம் தேதி (15-5-32) வக்ராரம்பம்.

உரானஸ், நெப்டியூன், ப்ளூடோ, முறையே மீனம், சிம்மம், மிதுனம் முதலிய கூட்டங்களில் இருக்கின்றன.

சந்திரன் :—வானத்தைச் சுற்றி வருகையில், இம்மாதம் 1-ம் தேதி (14-5-32) நெப்டியூனருகிலும், 11-ம் தேதி (24-5-32) சனியருகிலும், 18-ம் தேதி (31-5-32) உரானஸ் அருகிலும், 20-ம் தேதி (2-6-32) குஜனருகிலும், 21-ம் தேதி (3-6-32) புதனருகிலும், 25-ம் தேதி (7-6-32) சுக்ரனருகிலும், 27-ம் தேதி (9-6-32) குருவருகிலும், 28-ம் தேதி (10-6-32) நெப்டியூனருகிலும் காணப்படுகிறது.

நமது தொடர் கதை

# தேசபக்தன் கந்தன்

## ஒரு ரஸமான கதை

(ஸ்ரீமான் K. S. வெங்கடரமணி எழுதியது.)

(சென்றவாரத் தொடர்ச்சி).

[வெளியான பாகங்களின் சுருக்கம்:—ஆக்கூரில் தேசபக்தன் கந்தன் கள்ளுக்கடையில் பண்ணையாட்களைக் குடிப்பழக்கத்தை விட்டு விடும்படியாகப் போதனை செய்து விட்டுத்தன் உறவினனான கரியன் வீட்டுக்குச் செல்கிறான். அப்பொழுது கரியன் அங்கு குடிவெறியில் தன்மனைவியை அடித்து விடுகிறான். அதே சமயத்தில் தரங்கம்பாடி அஸிஸ்டெண்ட் கலெக்டராக மாற்றப்பட்ட ரங்கனும் தேசபக்தி நிரம்பிய அவனுடைய காதலியான ராஜேஸ்வரியும் தரங்கம்பாடிக்குச் செல்கின்றனர். ராஜேஸ்வரியின் நடவடிக்கைகளைக் கவனிக்க பொன்னன் என்ற போலீஸ் ஒற்றன் அவர்களுடன் பிரயாணஞ் செய்கிறான். கரியன் அஜாக்கிரதையால் ஆக்கூரில் அவ்வூர் மிராசுதாரான சொக்கலிங்க முதலியார் ஓட்டி வந்த ரெயிலுக்கு விபத்து ஏற்படுகிறது. ஸ்டேஷன் மாஸ்டரான சுந்தரத்தின் மனைவியான ஸரஸ்வதி கந்தனைப் பற்றிய விவரங்களை அறிந்து அவனுடன் தேசத்தொண்டில் சேர்வதாக வாக்களிக்கிறாள். அப்பொழுது சொக்கலிங்க முதலியார், நெல் களஞ்சியங்களை பண்ணை யாட்கள் தீ யிட்டுச் சூரையாடுகின்றனர்.

மறுநாள் காலையில் ஆக்கூர் ஸ்டேஷனில் ரங்கன், ராஜேஸ்வரி, மாயவரம் டிபுடிகலெக்டர் முதலியோர்கள் சொக்கலிங்க முதலியார், ஸரஸ்வதி முதலியோரை சந்தித்த பிறகு தரங்கம்பாடி செல்கின்றனர். அங்கு கடற்கரையில் ராஜேஸ்வரியும் கந்தனும் சம்பாஷித்துக்கொண்டிருக்கின்றனர். அப்போழுது போலீஸ் ஒற்றனான பொன்னன் கொடுத்த தகவலின் பேரில் ரங்கன் தரங்கம்பாடியிலிருந்து மாற்றப்பட்ட தந்தியுத்தரவை பொன்னனே ராஜேஸ்வரியிடம் காண்பித்து ரங்கனிடம் எடுத்துச்செல்கிறான். ரங்கன் தனது வேலையை ராஜிநாமா செய்து பொதுக் கூட்டம் ஒன்றைக்கூட்ட கந்தனுடன் ஆலோசிக்கிறான். அவர்களுடன் சொக்கலிங்க முதலியார் தேசத்தொண்டில் சேர்வதாக வாக்களிக்கிறார்.]

ரங்கன், "கந்தா, தேசத்தொண்டென்பது ஒரு ஆராய்ச்சிச் சாலையில் சிலர் பலகாலம் ஆழ்ந்து பரிசோதிதது பலருக்கும் பயன்படும்படிப் புத்தகங்களாலும் பத்திரிகைகளாலும் வெளியிடும் ஒரு விஷயமன்று. தேசத்தொண்டு செய்பவனுடைய வேலை ஊருராய்த் தெருத் தெருவாய் எங்குந் திரிந்து உழைக்க வேண்டிய வேலையாகும். அவ்வேலைக்குச் சொற்கள் தான் ஏற்ற ஆயுதம். ஆகையால் நமது ஜில்லாவை நான் சொல்லும் வண்ணம் இங்கேயே ஜில்லா முழுதுங் கூடும்படி ஒரு பெரிய கூட்டங் கூட்டி, இக்கோட்டையும் எதிரொலி செய்யும்படிப் பீரங்கி முழக்கம்போலப் பேசி விஷயங்களை வெளியிட்டு மக்கள் மனதிற் பதியச் செய்வது தான். குட்டையில் கிடக்கும் தவளை போல ஒரு கிராமத்திலேயே இருந்து கொண்டு



லான்ஸ் துரை வேறு போஜனையில் மூழ்கியவராய் "என்ன நடராஜ், உனக்கு இந்த வேலை பிடிக்கவில்லையோ" என்றார்.

வேலை செய்வதில் பயனில்லை. வெள்ளம்போலக் கிளர்ச்சியெங்கும் பெருகச் செய்யின் பழைய வண்டல் தானாகவே அவ்வெள்ளத்தால் அடித்துக் கொண்டு போகப்பட்டுப் புதிய கொள்கைகள் எங்கும் தோன்றிப் பரவும். நான் சொல்லுகிறபடி இங்கேயே பெரிய கூட்டத்தைக் கூட்டிக் கடலோசையும் அடங்க முழங்குவோம். அதன் பயன் நாட்டின் நாலா பக்கங்களிலும் பரவாவிடின் என் பெயர் ரங்கனில்லை!

"ஆமாம்:—ரங்கனில்லை, ரங்கசாமி" என்றாள் ராஜேஸ்வரி.

ரங்கன்:—"சென்னைப் பத்திரிகைகளுக்குத் தந்தி கொடுப்போம். இரண்டு வாரத்துக்கு நம் விஷயங்களை பத்திரிகைகளில் தலையெடுத்து நிற்கும். பல நாள் முயன்று பெற்ற பத்திராதிபர்களின் சிநேகம், தேச நன்மைக்கான இவ் விஷயத்திற்கூடப் பயன்படாவிடின் வேறெதற்குத்தான் பிரயோசனம்."

ராஜி:—"சரி சரி, கூட்டங் கூட்டமென்று வற்புறுத்தியது இதற்குத்தானா, ரங்கா! தெரிந்து கொண்டேன். கலெக்டர் வேலையை ராஜிநாமாச் செய்து விட்டு, தேச கைங்கரியத்துக்கு மாறின சிங்கக்குட்டி ரங்கனைப்பற்றி இரண்டு பத்தியாவது பத்திரிகைகளில் தலையங்கம் வரவேண்டாமா? அதுகூட இல்லாவிடின் தியாகத்திற்குத்தான் என்ன மதிப்பு?"

ரங்கன்:—"ராஜி, உனக்கு எப்போதும் என்னைப் பரிகசிப்பதுதான் வேலை. இந்தக் கூட்டத்தினால் வரும் நன்மையைப் பின்னர் நீயே அறிவாய். கரிகால் வளவன் காலத்திலிருந்த சிறப்பும் வளமும் நமது ஜில்லாவிற்கு இனி வரப் போகிறது. ஆனால் இப்போது இந்த ஏழை சொல் அம்பலமேறாது. இதன் பயன் பின்னே தான் பிரத்தியக்ஷமாகத் தெரியும்."

ராஜி:—ரங்கன் பேச்சினழகே அழகு. இந்தப் பாரத நாட்டில் எல்லாம் பேச்சளவிலே யிருந்தாற் போதும். வருந்தியழைக்க வேண்டுவதில்லை. அது தானே உன் சித்தாந்தம், ரங்கா?"

ரங்கன்:—"ராஜி, உண்மையாகவே நமது அத்வைத ஸித்தாந்தத்தில் மொழிக்கும் செயலுக்கும் பேதமில்லை. வீண் அஞ்ஞானந்தான் இந்த பேதத்துக்குக் காரணம்."

ராஜி:—"இது தான் சோம்பலுக்கேற்ற சித்தாந்தம். வாஸ்தவந்தான்."

ரங்கன்:—கந்தா, வீண் வார்த்தைகளில் பயனில்லை. பாமரர் மனத்தில் விஷயங்கள் பதிவதற்கு, அவர்கள் செய்ய வேண்டியவற்றைப் பேச்சின் மூலம் தெரிவித்தாலன்றிப் பயனேது? நமக்கும் இன்னது செய்வதென்ற தெளிவான கொள்கையேற்படாது; அவர்களுக்கும் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற்போலத் தானிருக்கும்.

சரஸ்வதி: "சரி, இருக்கட்டும். உன் கூட்டத்தை ஸர்க்கார் தடை செய்துவிட்டால்?"

கந்தன்:—பேஷ், ஸரஸ்வதி, உன் நாக்கில் ஸரஸ்வதி யிருக்கிறாள். இப்பொழுதிருக்கும் நிலையைப் பார்த்தால் நீ சொல்லுகிறபடியே ஆய்விடும்.

ரங்கன்:—"கந்தா, நீயும் அப்படியா நினைக்கிறாய்? நான் பந்தயம் கட்டுகிறேன். கலெக்டர் லான்ஸ் மடையனில்லை; என் விஷயத்தில் ஒரு நாளும் அப்படிச் செய்யமாட்டான். அஸிஸ்டெண்ட் கலெக்டரோ நம்முடன் ஐ ஸி எஸ் படித்துப் பாஸ்பண்ணின நடராஜன். அவனைப்பற்றியும் கவலையில்லை. ஆகையால் என் விஷயத்தில் நீங்கள் நினைக்கிறபடி ஆகாது. அவ்வாறுவதாயினும், இதைப் பரீக்ஷிப்பதற்காகவாவது இங்கே கூட்டங் கூட்டித்தானாகவேண்டும்."

சொக்கலிங்க முதலியாரும் இதை ஆமோதித்தார். ஏனெனில் அவர் தரங்கம்பாடியைத் தம் ஆதிக்கத்துக்குட்பட்டதாகக் கருதிவந்தார். அங்கே ஸர்க்கார் ஆதிக்கம் செலுத்துவதில் அவருக்கு அவ்வளவு திருப்தியில்லை. இச்சமயம் தம்முடைய அதிகாரத்திறமையை நன்கு வெளிப்படுத்தலாமென்பது அவர் நோக்கம். ஆதலால் அவர் "கலெக்டர்வாள் மீடிங்கை நடத்துங்கள். நான் பார்த்துக் கொள்ளுகிறேன். போலீஸ் புலிகள் என்னிடம் வாலை ஆட்டமாட்டா. இந்தத் தாலூகா முழுதும் தரங்கம்பாடியில் கூடும்படி செய்கிறேன். திருவாரூர்த் தேர் ஓட்டிவைத்தவனுக்கு இதென்ன பிரமாதம்? என்னுடைய நந்தன், மூக்கன் வகையராக்களுக்குச் சிறிது கண்ணைக் காட்டிவிட்டாற் போதும். போலீஸ் புலிகள் இருந்தவிடம் தெரியாமல் பூனைகள் போலப் பதுங்கிவிடும். இன்று முதல் நானும் உங்கள் கட்டளைக் குட்பட்ட ஒரு தொண்டனென்பதை மறவாதீர்கள்" என்றார்.

ரங்கன் ஒரு காகிதத்தையெடுத்து அதில் ஏதோ எழுதி, அருகே ஒரு பக்கத்தில் வழக்கம்போல மரியாதையுடன் நின்று கொண்டிருந்த பொன்னனைக் கூப்பிட்டு அவனிடம் கொடுத்து 'இதை உடனே தபாலாபீசுக்குக் கொண்டுபோய்த் தந்திகொடு' என்றான்.

கந்தன்:—என்ன ரங்கா, பட்டணம் பத்திரிகைகளுக்குத் தந்தியா?

ரங்கன்—ஆமாம் இந்தியா முழுவதுக்கும் தந்தி, 'தாங்பாடியில் மீட்டிங்; வெள்ளிக்கிழமை மாலை' இவ்வளவுதான் விஷயம்.

ரங்கன் இதனோடு பேச்சை நிறுத்தி விட்டு யோசனையில் ஆழ்ந்தான். பிரசங்கம் வாய்ப்பேச்சாயினும்; கூட்டங்கூட்டுவதென்பது செயலின் கூறுதானே. ஆகவே வார்த்தையைக் குறுக்கிக் காரியத்தில் மனத்தைச் செலுத்தலானான். பேச்சைக்குறைப்பது தான் காரிய சித்திக்கு வலிமையளிக்குமென்று அவனுக்கும் மனத்திற் பட்டது. தீர யோசிப்பின் சொல் சொல்தான்; செயல் செயல் தான். ஒன்று அழிந்து விடுகிறது, மற்றொன்று நிலைக்கிறது என்று தனக்குத் தானே யெண்ணிக்கொண்டான்.

இங்கே தாங்கம்பாடியில் இவர்கள் நிலை இவ்வாறிருக்க, தஞ்சைக் கலெக்டரின் இருப்பிடமாகிய வல்லத்தில் நடந்த சர்க்கார் நாடகத்தைச் சற்றுக் கவனிப்போம். வல்லம் ஊர் அழகான கிராமம். அது தஞ்சாவூருக்கு அருகே 7 மைல் தூரத்தில் மேட்டுப்பாங்கான பிரதேசத்தில் அமைந்துள்ளது. குறைவில்லாத நல்ல காற்று முதலியவற்றுடன் கூடிய ஆரோக்கியமான இடமாகும். தஞ்சை ஜில்லாவானது மற்ற ஜில்லாக்களைவிட நீர்நில வளத்திலும், செல்வத்திலும், நாகரிகத்திலும், ஜனத்தொகையிலும் மேம்பட்டு நிற்பதனால், ஐ. ஸி. எஸ். வர்க்கத்தைச் சேர்ந்தவர் ஒவ்வொருவரும் தஞ்சை ஜில்லா கலெக்டர் வேலையை விரும்புவது வழக்கம். அது முற்காலத்துச் சோழ மன்னருடைய பெருமைக்கிடான பெருமையுடையதென்னலாம்.

அப்பொழுது தஞ்சைக் கலெக்டராகிய லான்ஸ் துரை தன் வேலையில் சுமார் 23 வருஷ அனுபவமானவர். அவர் காரியத்தில் நல்ல சமர்த்தர். ஆனால் மொழியின் சுவையைத் தான அனுபவித்தவருமல்லர்; பிறருக்குப் புகட்டினவருமல்லர். அவர் தம்முடைய திறமைக்கும் குணாதிசயங்களுக்கும் இந்தக் கலெக்டர் உத்தியோகமும் ஏற்றதன்றென்றும், கர்ஸன் துரையைப் போலத்தாமும் ராஜப்பிரதிநிதியாயிருக்க வேண்டியவரென்றும் அடிக்கடி நினைப்பார். தம்முடைய அதிர்ஷ்ட ஹீனத்தைப் பற்றிப் பிறரிடம் வெளியிடாமல், மாலை வேளைகளில் தாம் வேட்டைக்குச் செல்லும் போது நன்றியறிவுடன் தம்மைப் பின் தொடர்ந்து வரும் 'டெரியா' ஜாதிநாயுடுவுடன் ஏகாந்தத்தில் புலம்பி ஆற்றிக் கொள்வார். இந்நிலையில் அவர் தம்மைத் தாமே சிறிது வெறுத்து நொந்து கொள்வாரானார். ஆதலால் அவர் பிறரிடம் அன்பு பாராட்டுவதெப்படி?

தஞ்சை ஜில்லாவிலும் ஒத்துழையாமைக் குழப்பம் தொடங்குகிறதென்று லான்ஸ் துரை கேள்வி யுற்றதும், அதனை முளையிலேயே களைந்து விடவேண்டுமென்று தீர்மானித்து ஜில்லா போலீஸ் ஸூபரின்டெண்டென்டையும் ஆஸிஸ்டெண்டு கலெக்டரையும் அழைப்பித்து அவர்களுடன் ஆலோசிக்கலானார்.

"மிஸ்டர் லான்ஸ், தாங்கள் அநாவசியமாய் இவ்வளவு கவலைப் படுகிறீர்கள். தஞ்சாவூர் நான் பிறந்த ஜில்லா. இந்த ஜில்லா ஜனங்களின் சுபாவம் எனக்கு நன்றாய்த்தெரியும். காந்தி தம் ஆச்ரமத்தையே சபர்மதியிலிருந்து இங்கே மாற்றினாலும் இந்த ஜில்லாவின் அமைதியைக் கெடுக்க வியலாது. இந்த ஜில்லா ஜனங்கள் தமக்கு நேரே ஏதேனும் காரியக் கேடு நேர்ந்தாலன்றி வீண் ஆரவாரங்களுக்காக ஒருநாளும் மனந்துணிந்து தியாகம் செய்ய மாட்டார்கள். அவர்களை நேரில் வயிற்றிலடித்தால் ஒரு வேளை யென்னவோ! ஆனால் நம்முடைய ராஜதந்திரத்தில் அந்தக்காரியம் நாம் ஒரு நாளும் செய்யப்போவதில்லை. அநாவசியமாய், இருண்டதை பெல்லாம் கண்டு நாம் மருளுவது தவறு. இப்படி நாம் சில்லரைத் தொந்தரவுகள் செய்து வந்தால், அது ஜனங்களை நாமே கிளப்பி விடுவதோடு, நம்முடைய பயம் வெளியாவதற்கும் இடமாகும். இந்த ஜில்லாவில் ஏதோ முன்காலத்தில் நல்ல புத்திமான்கள் பலர் பிறந்தனரென்று கேள்வி. இப்பொழுது, உற்பத்தியாவதெல்லாம் குமாஸ்தாக்களும் சமையற்காரர்களுந்தான்'! என்று ஆஸிஸ்டெண்ட் கலெக்டர் மொழிந்தார்.

"நீர் சொல்வது வாஸ்தவந்தான். ஆனால் ஏதோ ஐ. ஸி. எஸ்ஸை அலங்கரிப்பதற்குச் சில சாமர்த்திய சாலிகளும் இந்த ஜில்லாவில் தோன்றுகிறார்களே"

கலெக்டர் துரையவர்களிடமிருந்து வந்த இந்த வெகுமானத்தை நடராஜன் வினயத்துடன் அங்கீகரித்துச் சிறிது தலை குனிந்து, இனிய குரலில் பேஜும் கூறலானான்.

"நான் வற்புறுத்திச் சொல்லுவதற்கு மன்னிக்கவேணும். இந்தத் தாங்கம்பாடி சமாசாரத்தை நாம் காதில்கூட போட்டுக்கொள்ள வேண்டியதில்லை. அது செம்படவர் சண்டைக்கும் கேவலமானது. இந்த ரங்கன் பேச்சில், உபமான உபமேயங்களுடன் அலங்காரமாகப் பேசுவதைத் தவிர விஷயமொன்றுமிராது. கல்லுங்கனியும்படி அழகாகப் பேசுவான்; ஆனால் தாங்கம்பாடிக் கோட்டையில் அளறடிக்காத முழுக்கல் ஒன்று கூடக் கிடையாது அவன் பேச்சைக் கேட்டு உருகுவதற்கு. அங்கே கடற்கரையில் நண்டுகள்கூடக் கிடையாது; அவன் பேச்சைக் கேட்பதற்கு ஆட்கள் யாரங்கே! அது நோயாளிகட்குத் தகுதியான விடம். நாம் இவ்விஷயத்தில் ஒன்றும் தலையிடாமலிருந்து விடுவோமாயின், காற்றால் உயரக் கிளம்பின புழுதி தானே யடங்கிவிடுவதுபோல இதுவும் தானே இருந்தவிடந் தெரியாமல் அடங்கிப்போகும்."

"ஆமாம் நீ சொல்வது ஒரு விதத்தில் சரிதான். ஆனால் கந்தன் சமாசாரம்? அவனை உனக்கு நன்றாய்த் தெரியுமென்றும், நாட்டுத் தொண்டில் அவனை நன்கு மதிக்கும்படிக்கும் நீ தானே சொன்னாய். அதனால்தானே ஆக்கூர் தீக் கலகத்தில் என் நண்பர் முதலியார் வார்த்தைக்கிணங்க அவனை யொன்றும் சிக்ஷை செய்யாமல் விட்டேன். அவன் இதில் முனைந்து நின்றால்?"

"ஆம்; கந்தனை யெனக்கு நன்றாய்த் தெரியும். அவன் மனவுறுதியும் பரிசுத்தமுமுள்ள ஒரு தொண்டன். ஆனால் அவன் என்ன செய்யமுடியும்; ஒருவர் இருவரை மாற்றலாம். ஒரு துளி தேன் இந்தப் பரந்த கடலில் உவர்ப்பை என்ன செய்யமுடியும்? கந்தன் தற்புகழ்ச்சியை நாடுபவனல்லன்; அதனால் எதையும் படாடோபப்படுத்தமாட்டான். இவ்வுலகத்தில் படாடோபமில்லாவிட்டால் பெரிய காரியமொன்றையும் செய்து முடிக்க முடியாது. நன்மை செய்வதில் கூடப் பலர்க்கும் பயன்படத்தக்க பெரு நன்மையைச் செய்ய முடியாது. இக்காலத்தில் பிச்சைகூட குடுகுடுப்பாண்டிபோல ஏதேனும் படபடவென்றடித்தால் தான் போடுவார்கள். அதுவும் வீட்டுக்காரனுக்குக் காதுவலியெடுக்கும்வரை குடுகுடு அடிக்க வேண்டும். அப்பொழுதுதான் ஏதேனும் கிடைக்கும்."

"சரி. நீ சொல்லுகிறபடியே வைத்துக்கொள்வோம். குடுகுடு அடிக்க ரங்கசாமி சேர்ந்திருக்கின்றான்; போதாக் குறைக்கு ராஜேஸ்வரியும் சேர்ந்திருக்கிறாள். அவர்களைச் சேரவொட்டாதபடி செய்யவேண்டிய தவசியமல்லவோ?"

"அவர்களெல்லாரையும் எனக்குத் தெரியும். ராஜேஸ்வரியையும் நன்றாய்த் தெரியும். அவளுக்கு நல்ல வசிய சக்தியுண்டு. அதனை ஆக்ஸ்போர்டில் காதற் கலகத்தில் பிரயோகித்தாள். இப்பொழுது தேசத் தொண்டில் திருமபியிருக்கிறாள் போலிருக்கிறது இது எத்தனை நாளைக்கோ! பாவம், கோடீசுவரன் பெண். இப்படி திரும்பிவிட்டாள். காந்தியின் வேலை அத்யாச்சரியமானதுதான். மிஸ்டர் லான்ஸ்! நீங்கள் அவரைப் பார்த்திருக்கிறீர்களோ?"

லான்ஸ் துரையோ வேறு யோசனையில் முழுகியிருந்தவராதலால் நடராஜனை நோக்கி, "என் நடராஜ்! உனக்குஇந்தத் தடியடி வேலை பிடிக்கவில்லையோ! மனசாட்சிக்கு விரோதமென்று தோன்றுகிறதோ" என்றார்.

(தொடரும்.)




## தங்க ஏற்றுமதி.

சென்னை: ரூ. 7 லக்ஷம்

வியாபாரக் குறிப்புகள்.

சென்னை, மே,11—

**நாணய மாற்றம்.**

இம்மார்க்கெட் இவ்வாரம் மந்தமாக விருந்தது மல்லாமல் அமைதியாகவுமிருந்தது. சென்ற வாரக் கடைசியில் விகிதங்கள் வலுவாக விருந்த பொழுதிலும் இவ்வார ஆரம்பமுதல் மறுபடியும் வலுத்து விட்டன. தந்திக்கு 17 15/16 பென்ஸாகவும், தரிசனத்திற்கு 17 31/32 பென்ஸாகவும் இருக்கின்றன. மூன்றுமாத உண்டியல்கள் 18 1/8 பென்ஸாக விருக்கிறது. ஸ்டர்லிங் டாலர் விகிதம் 3·66 1/8 விருந்து 3 67 3/8க்கு அதிகரித்திருக்கிறது.

**ரொக்கக்கடை.**

பணத்திற்குத் தேவை நன்றாக விருந்த பொழுதிலும் விகிதம் 3½ முதல் 3¾%லேயே இருந்தது. இம்பீரியல் பாங்கி வட்டி 5%ல் மாறுதவில்லை. எப்ரல் 29ந் தேதியோடு முடிவாகிய இம்பீரியல் பாங்கி வரவு செலவு இருப்பு யாதாஸ்தில் பப்ளிக் டிபாஸிட்டுகளும், இதர டிபாஸிட்டுகளும் முறையே ரூ. 21·37 லக்ஷமும் ரூ. 69·71 லக்ஷமும் குறைந்திருக்கின்றன. பேபர் கரன்ஸியிலிருந்து வாங்கப்பட்ட கடனில் 50 லக்ஷ ரூபாய் திருப்பிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதில் பாக்கி 2 கோடி ரூபாய். கவர்ன்மெண்டு செக்யூரிடிகள் ரூ 63·71 லக்ஷம் அதிகம். கவர்ன்மெண்டாரும் தங்களுடைய கடனில் 5½ கோடி ரூபாய் திருப்பிக் கொடுத்திருக்கின்றனர். இதன் மீதி இப்பொழுது 1½ கோடி ரூபாய். ரொக்க கிரெடிட்டுகளும், ரொக்க இருப்பும் முறையே ரூ 36 44 லக்ஷமும், ரூ 95·91 லக்ஷமும் அதிகரித்திருக்கின்றன. வரவு செலவு விகிதம் 13 35 விருந்து 15·24%க்கு அதிகரித்திருக்கிறது.

இவ்வாரம் மூன்றுமாத உண்டியல்களுக்கு டெண்டர் செய்யப்பட்ட 2,00,25,000 ரூபாயில் ரூ. 98-13-6 விகிதத்தியவைகளும் அதற்கு மேற்பட்டவைகளும் ஒத்துக் கொள்ளப்பட்டன. மொத்தம் அங்கீகரிக்கப்பட்டது ரூ. 1,97,00,000 இவைகளின் வருஷவருமானம் ரூ. 4-8-9. இவ்வாரம் மத்தியகால உண்டியல்கள் ரூ. 184,75,000க்கு விற்கப்பட்டது.

**தங்கம், வெள்ளி.**

ஸ்டர்லிங் டாலர் விகிதம் மூன்று பாயிண்டுகள் அதிகரித்தது, தங்க மார்க்கெட்டில் விலை அதிகரிப்பில் நன்கு தெரிந்தது. சென்ற வார ஆரம்பத்தில் டாலர் விகிதம் 3·65¼ விருந்தது முடிவில் 3.68¼க்கு அதிகரித்தது. இன்று இது 3.67 3/8 ஆக இருக்கிறது. தங்க மார்க்கெட்டில் விலைகள் ரூ. 27—15 விருந்து ரூ 28—2வரை அதிகரித்தது. திங்கட்கிழமையிலிருந்து ரூ. 28 ஆக விருக்கிறது. சென்ற வார ஸெட்டில்மெண்டில் நல்ல வியாபாரம் நடந்ததாகத் தெரிகிறது. சவரன்கள் சென்றவாரக் கடைசியில் கொஞ்சம் விலை அதிகரித்த பொழுதிலும் இவ்வாரத்தில் பழய நிலைமைக்கு வந்து விட்டது. சென்ற சனிக்கிழமை சென்ற மெயில் கப்பலில் தங்க ஏற்றுமதிக்காக சென்னையிலிருந்து 7 லக்ஷ ரூபாய் பெறுமானமுடைய தங்கம் சென்றது என்று நாம் அறிகிறோம். 'ஸ்ட்ராத்ஹோர்ட்' என்ற கப்பலில் தங்க ஏற்றுமதியின் மதிப்பு ரூ. 93·88 லக்ஷம். சென்ற வாரம் பம்பாய் மூலம் இந்தியாவில் இறக்குமதி கட்டியும் நாணயமுமாக ரூ. 87,431.

வெள்ளி மார்க்கெட்டில் மாறுதல்கள் அதிகமாக விருந்தபொழுதிலும் விலைகளில் மாறுதல்கள் கொஞ்சமாகவே இருந்தன. ஸெட்டில்மெண்டிற்குப் பிறகு விலை ரூ. 56-12-0-க்கு அதிகரித்தபொழுதிலும் இவ்வாரம் முன் நிலைமைக்கு வந்துவிட்டது. சுமார் நான்கு மாதங்களானபிறகு முதல் முதலாக சென்ற மாதம் 29-ந்தேதி 25,000 பவுனும், மே 7-ந்தேதி 15,000 பவுனும் பெறுமான வெள்ளி லண்டனிலிருந்து இந்தியாவிற்கு அனுப்பப்பட்டதாகச் செய்தி கிடைத்திருக்கிறது. ஆகையால் இந்தியாவில் இந்நான்கு மாதங்களில் விலை சாசமாய் இருந்ததென்றும், இந்தியா மார்க்கெட்டுகளின் தேவை இந்தியாவிலிருந்தே சரிப்படுத்தப்பட்டிருக்கின்றன என்றும் தெரிகிறது.

### நாணய மாற்றம்.

| | | பென்ஸ் |
|---|---|---|
| லண்டன்மேல் தந்தி விற்கிற விலை | 17 | 15/16 |
| தரிசன உண்டி விற்கிற விலை | 17 | 31/32 |
| தந்தி வாங்குகிற விலை | 18 | 31/32 |
| தரிசனஉண்டி வாங்குகிற விலை | 18. | 1/16 |
| 1-மாத தவணை ,, | 18. | 1/16 |
| 2-மாத தவணை ,, | 18. | 1/32 |
| 3-மாத தவணை ,, | 18. | 1/8 |
| 4-மாத தவணை ,, | 18. | 3/16 |
| 6 மாத தவணை ,, | 18. | 1/4 |

பிரான்ஸ் மேல் தரிசன உண்டி விற்பனை ரூ. 100-க்கு பிராங்கு670

ஜர்மனி தரிசன உண்டி விற்பனை மார்க்குக்கு ரூ. 105

அமெரிக்கா தரிசன உண்டி விற்பனை டாலர் 100-க்கு ரூ: 375

அமெரிக்கா தரிசன உண்டி வாங்குவது டாலர் 100-க்கு 350

சிங்கப்பூர் தரிசன உண்டி விற்பனை டாலர் 100-க்கு ரூ. 156

சிங்கப்பூர் தரிசன உண்டி வாங்குவது டாலர் 100-க்கு ரூ. 150

ஹாங்காங் தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை டாலர் 100-க்கு ரூ. 90

ஷாங்ஹாய் தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை டேயல் 100-க்கு ரூ. 118

ஜப்பான் தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை என் 100-க்கு ரூ. 122.

ஜப்பான் 2-மாத தவணை உண்டி வாங்குவது என் 100-க்கு ரூ. பெயரளவு

ஜாவா தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை ரூ. 100-க்கு கில்டர் 66

ஜாவா தந்தி அல்லது தரிசன உண்டி வாங்குவது ரூ. 100-க்கு கில்டர்- பெயரளவு

பாரிஸில் லண்டன் மேல் தந்தி பவுன் 1-க்கு பிராங்கு 931/26

லண்டனில் அமெரிக்கா மேல் தந்தி ஸ்டர்லிங் பவுன் 1-க்கு டாலர் 3 67¾

### வட்டி விகிதங்கள்.

இம்பீரியல் பாங்கு வட்டி 5%

பாங்க் ஆப் இங்கிலாந்து வட்டி 3%

### தங்கம், வெள்ளி.

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| சவரன் | 17 | 12 | 0 |
| பம்பாய் கட்டி தங்கம் தோலா 1-க்கு | 28 | 0 | 0 |
| வெள்ளி ரூ. 100 எடை | 56 | 8 | 0 |
| ரூ. 1 எடை | 0 | 9 | 6 |

### சர்க்கார்கடன் பத்திரங்கள்

| | முதல் ரூ. அ. | | வரை. ரூ. அ. | |
|---|---|---|---|---|
| 3½% கவர்ன்மெண்டு பேபர் | 61 | 6 | 62 | 14 |
| 5% கடன் 1931—36 | 92 | 4 | 93 | 12 |
| 5% கடன் 1934—37 | 91 | 4 | 92 | 12 |

% கடன் 1960—70
68 8 70 0

3½% பாண்டு 1934
96 12 98 4

4½% கடன் 1955—60
78 12 80 4

5% யுத்தக்கடன் 1929—47
90 6 91 14

5% பாண்டு 1935
96 14 98 6

5% கடன் 1939—44
91 4 92 12

5% பாண்டு 1933
99 7 100 15

5% கடன் 1945—55
98 10 100 2

6% பாண்டு 1932
99 11 101 3

6% பாண்டு 1933—36
99 7 100 15

6½% டிரஷரி பாண்டு 1935
101 10 103 2

5 %மைசூர் கடன் 1955
95 0 96 0

5½ %மைசூர் கடன் 1938
100 8 101 12

5½% மைசூர் கடன் 1940
106 8 107 8

6½% மைசூர் கடன்1941—51
109 0 110 0

---

## சென்னை சுதேசி ஜவுளி மார்க்கெட்.

### தோவத்திகள்.

அஸ்வாமில்:—

| | கெ. | ரூ.அ.பை. |
|---|---|---|
| சர்தார் | 6 | 2 3 0 |
| ,, | 7 | 2 9 0 |
| ,, | 8 | 2 15 0 |

ஜூபிலி மில்:—

| | | |
|---|---|---|
| ராஜகோபால் | 6 | 2 9 0 |
| ,, | 7 | 3 0 0 |
| ,, | 8 | 3 7 0 |
| தேசபக்தன் | 8 | 3 6 0 |
| ,, | 9 | 3 14 0 |

காலிகோ மில்:—

| | | |
|---|---|---|
| 501சேலம்கரை | 6 | 2 8 0 |
| ,, ,, | 7 | 2 15 0 |
| ,, ,, | 8 | 3 6 0 |
| 461 ,, | 7 | 2 14 0 |
| 600 பூகரை | 6 | 2 9 0 |
| 700 ,, | 7 | 3 0 0 |
| 800 ,, | 8 | 3 7 0 |
| 900 ,, | 9 | 3 14 0 |
| மாம்பழம் | 6 | 2 8 0 |
| ,, | 7 | 2 15 0 |
| ,, | 8 | 3 6 0 |
| 4000 வேசு | 4 | 2 0 0 |
| 6000 ,, | 6 | 2 14 0 |
| 7000 ,, | 7 | 3 6 0 |
| 8000 ,, | 8 | 3 14 0 |
| 9000 ,, | 9 | 4 6 0 |
| 10000 ,, | 10 | 4 14 0 |
| வி. ஹாவா | 8 | 5 0 0 |
| ,, | 9 | 5 10 0 |

### புடவைகள்.

காலிகோ மில்:—

| | | |
|---|---|---|
| 3296 வெள்ளை | 7 | 4 0 0 |
| ,, ,, | 8 | 4 8 0 |
| ,, சாயம் | 7 | 4 4 0 |
| ,, ,, | 8 | 4 12 0 |
| ,, ,, | 9 | 5 4 0 |
| 3396 வெள்ளை | 7 | 3 4 0 |
| ,, ,, | 8 | 3 12 0 |
| ,, சாயம் | 5 | 2 12 0 |
| ,, ,, | 6 | 3 4 0 |
| ,, ,, | 7 | 3 12 0 |
| ,, ,, | 8 | 4 4 0 |
| 3496 ,, | 7 | 4 8 0 |
| ,, ,, | 8 | 5 0 0 |
| ,, ,, | 9 | 5 8 0 |
| ஸ்ரீமதி ,, | 7 | 4 12 0 |
| ,, ,, | 8 | 5 4 0 |
| ,, ,, | 9 | 5 12 0 |
| B/368வெள்ளை | 7 | 4 4 0 |
| ,, ,, | 8 | 4 12 0 |
| F/369 சாயம் | 8 | 4 12 0 |
| B/382 ,, | 7 | 4 12 0 |
| ,, ,, | 8 | 5 4 0 |
| 339 ,, | 6 | 4 6 0 |
| ,, ,, | 7 | 5 2 0 |
| ,, ,, | 8 | 5 14 0 |
| ,, ,, | 9 | 6 10 0 |
| B/462 ,, | 8 | 6 8 0 |
| ,, ,, | 9 | 7 5 0 |
| 45171 ,, | 8 | 5 4 0 |
| வாயில் புடவை | 5 | 3 8 0 |
| ,, | 6 | 4 0 0 |

### லாங்கிளாத்.

காலிகோ மில்:—

| | | | | |
|---|---|---|---|---|
| லக்கி (40) | 12 | 4 | 6 | 0 |
| ஹோப் (40) | 12 | 0 | 5 | 9 |
| A S I (40) | 12 | 8 | 6 | 0 |
| A L (20) | 12 | 0 | 10 | 0 |
| S A I (10) | 5 | 0 | — | |
| C C I (4) | 4 | 0 | — | |

### மல்.

காலிகோமில்:—

| | | | | |
|---|---|---|---|---|
| காலேபனி | 12 | 0 | 10 | 0 |
| 703 (20) | 7 | 0 | 6 | 6 |
| AAA (20) | 9 | 0 | 8 | 0 |
| 324 (20) | 12 | 0 | 10 | 0 |
| A/354 கோரா (20) | 6 | 12 | — | |
| 180 வாயில் (20) | 8 | 0 | — | |
| B/192 வாயில் (24) | 18 | 0 | 12 | 6 |

### கோட்டிங்.

காலிகோமில் :—

| | | | | |
|---|---|---|---|---|
| J/19, J/20, MC/3 | 10 | 4 | 7 | 6 |
| A/264 லாடின் | 14 | 10 | 12 | 0 |
| A/297 லாடின் | 12 | 8 | 10 | 6 |

---




சென்னையில் செல்லாராம் கியான் சந்த ஜவுளிக்கடையில் தீயால் விளைந்த சேதம். P. P. B.

| | | |
|---|---|---|
| ,, | 7 | 4 8 0 |
| ,, | 8 | 5 0 0 |
| ,, | 9 | 5 8 0 |
| குலாப் காளி | 7 | 1 14 0 |
| ,, | 8 | 2 4 0 |
| ,, | 9 | 2 10 0 |

### ட்வில்.

ஜூபிலி மில்:—

| | பீஸ் ஒன்றுக்கு விலை | கஜம் ஒன்றுக்கு விலை |
|---|---|---|
| | ரூ.அ. | அ.பை. |
| பீஸ் ஒன்றுக்கு கெஜம். | | |
| 18 (40) | 11 0 | 5 0 |
| 1132 (40) | 11 0 | 5 0 |

காலிகோ மில்:—

| | | | |
|---|---|---|---|
| C 99 (20) | 7 0 | 6 | 3 |
| B 21/1(40) | 13 0 | 6 | 0 |
| B 66 (20) | 9 2 | 8 | 0 |
| B 390 (20) | 10 8 | 9 | 0 |

## இரும்பு எஃகுசாமான்கள்.

| | முதல் | வரை |
|---|---|---|
| | ரூ. அ. பை. | ரூ. அ. பை. |

ஸ்டீல் கர்டர்கள்:—

ஆர். ஸ்டீல் கர்டர்கள் (காண்டினெண்டல்) அந்தர் 1-க்கு
4 12 0 5 8 0

ஆர். ஸ்டீல் கர்டர்கள் (டார்மென்லாங்கு) அந்தர் 1-க்கு
7 6 0 8 8 0

ஸ்டீல் சானல்கள்:—

மைல்டு ஸ்டீல் சானல்கள் (காண்டினெண்டல்) அந்தர் 1 க்கு
6 0 0 3 8 0

மைல்டு ஸ்டீல் சானல்கள் (டார்மென்லாங்கு) அந்தர் 1-க்கு
8 0 0 9 0 0

எக்ஸ்பான்டேட் மெடல்:—

எக்ஸ்பான்டெட் மெடல் சதுர அடி 1-க்கு

| | | |
|---|---|---|
| 3 மெஷ் | 0 2 3 | 0 3 0 |
| 1½ மெஷ் | 0 1 9 | 0 2 0 |
| ¾ மெஷ் | 0 2 0 | 0 2 7 |
| 3/8மெஷ் | 0 2 0 | 0 2 6 |

முள்ளுக் கம்பி:— ரூ அ.பை.

முள்ளுக் கம்பி ரோல் 1-க்கு100,105 டா. 13 0 0

டை அந்தர் 1-க்கு 12 0 0

துத்துநாகத் தகடு:—

துத்துநாகம் வளைவு தகடுகள் 6, 7, 8, 9, 10/3×24 அந்தர் 1-க்கு 11 12 3

10, 10/3×24 ,, 12 8 3

சாதா தகடு 26 கேஜ் ,, 13 4 3

24 கேஜ் ,, 12 4 3

நிரளைக்கம்பி, சதுரம்:—

பாரம்1-க்குவிலைகீழ்க்கண்டவாறு:—

| | |
|---|---|
| நிரளைக்கம்பி 3/16, | 23 0 0 |
| சதுரம் 3/16 | 23 0 0 |

தகடு கட்டு:—

பாரம்1-க்கு விலை கீழ்கண்டவாறு:—

| | |
|---|---|
| தகடு கட்டு 2 தகடுகள் | 30 0 0 |
| டை 3, 4, 5 | 36—38 |
| டை 6, 7, 8, 9 | 38—41½ |
| டை 10, 11, 12, 13, | 41 8 0 |

இரும்பு, ஆணி வகையறா:—

அந்தர்1-க்குவிலை கீழ்கண்டவாறு:—

| | |
|---|---|
| பீப்பா கட்டு¾×1/8 | 31 8 0 |
| டை 1/16 | 29 0 0 |
| டை 1×1/8 மு 4×1/8 வ | 31 8 0 |
| மட்ட எஃகு 1 | 26 8 0 |
| டை 1 1/8 | 26 8 0 |
| டை 1¼ | 26 8 0 |
| உயர்ந்த மட்ட எஃகு | 30 0 0 |
| உளிக்கட்டு LA X | 18 4 0 |
| L× மார்க்கு | 18 0 0 |
| லாடாணி 0 | 47 8 0 |
| ,, 00 | 46 0 0 |
| ,, நெ. 1. | 50 0 0 |

மண்வெட்டி:

மண்வெட்டி டஜன் 1-க்கு முதலை மார்க்கு பச்சை லேபில் 7 8 0

| | |
|---|---|
| ரெட்டைக்கொடி | 7 0 0 |
| கடாமார்க்கு | 7 0 0 |
| தராசு மார்க்கு | 6 12 0 |
| குதிரை மார்க்கு | 9 6 0 |

சட்டம்:—

பாரம் 1-க்கு விலைகீழ்க்கண்டவாறு:

| | |
|---|---|
| சட்டம் ¾×¼ | 33 0 0 |
| இருசு தண்டு 1½ மு 2 | 33 0 0 |
| பொத்தச் சட்டம் 1½×3/8 முதல 1¾×3/8 வரை | 27 8 0 |
| சீமைச் சட்டம் 1×½ முதல் 4×½ வரை | 71 0 0 |
| சீமை இருசுத்தண்டு 1½ முதல் 2 வரை | 70 0 0 |
| வில்கட்டு 1×½ முதல் 2×½வரை | 38—39 |

ஹோமியோபதி




### "உஷ்ணம் உஷ்ணேன சாம்யதி."

(கௌசிகன் எழுதியது.)

உஷ்ணம் உஷ்ணேன சாம்யதி என்பது ஒரு வடமொழி வாக்கியம். அநேகருக்கு இது பழமொழிபோல அதிகப் பழக்கமுடையது. இந்த வாக்கியத்துக்கு "உஷ்ணத்தை உஷ்ணத்தினால் சமனப்படும்படி செய்கிறது" என்பது பொருள். ஒரு வஸ்துவைக் கெட்ட இடத்தில் தேடு என்பார்கள். அது எங்கே போக்கடிக்கப்பட்டதோ அங்கேதான் தேட வேண்டும். கிணற்றில் ஒரு மோதிரம் விழுந்துவிட்டால அதைப் போய் ஆற்றில் தேடினால் கிடைக்காது. எந்த மாதிரியான உபாதி வந்திருக்கிறதோ அதையேயுண்டாக்கக்கூடிய மருந்தைக் கொடுப்பது பரிகாரத்துக்கு ஒரு வழி. ஒரு கடையில செருப்பு வாங்கினால் அவன் அதை தோல்வாரொன்றினால் கட்டிக்கொடுக்கிறான். ஒருவன் வீடு கட்டும்போது மண்ணால் செய்யப்பட்ட செங்கலகளை மண்ணைக்கொண்டே சேரும்படி கட்டுகிறான். சிலர் மண்ணுக்கு சம்பந்தமுடைய சுண்ணாம்பினால் கட்டுகிறார்கள், வைத்தியத்தில் இரண்டு முறைகளிருக்கின்றன. ஒருவருக்குப் பித்தம் அதிகமாயிருந்தால் பித்தத்தை உண்டாக்கத்தக்க சாமானைக் கொடுத்து முதல் பித்தத்தைத் தணிப்பதற்கு "ஹோமியோபதி" யென்று பெயர். வேறுவிதமான மாறுதல்களைத் தேகத்தில் உண்டாக்கத்தக்க மருந்துகளைக் கொடுத்து வியாதியைச் சொஸ்தம் செய்வதற்கு "அல்லோபதி" என்பார்கள். அபின் மலச்சிக்கலையுண்டாக்கும். மலச்சிக்கல் என்ற வியாதிக்கு அபினையே மருந்தாகக் கொடுப்பார்கள். ஆனால் அதே மாதிரி வியாதியை உண்டாக்கத்தக்க மருந்துப் பிரயோகம் செய்யும் ஹோமியோபதி முறையில் நாம மேலே கூறிய அபினில் கடுகளவு எடுத்து அது கரையக் கூடிய திரவ பதார்த்தத்தில் அதைக்கரைத்து அதைப்போன்ற நூறு பங்கு, ஆயிரம் பங்கு திரவ பதார்த்தத்தால் அதைப் பெருக்கி, இதில் ஒருசொட்டு குடித்தால் மலச்சிக்கலை மாற்றும் என்கிறார்கள். ஆங்கில முறை வைத்தியம் எல்லாம் அல்லோபதி என்பதாகும். ஆனால் கொஞ்சகாலமாக ஊசியால் குத்தி மருந்தை ஏற்றும் வைத்திய முறையில் ஹோமியோபதியின் கொள்கை அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. இதை ஒரு உதாரணத்தால் விளக்கப் பார்ப்போம். ஒருவனுக்கு சிரங்கினால் உபத்திரவம் என்று வைத்துக்கொள்வோம். ரத்தத்தை சுத்தம் செய்ய உள்ளுக்கு மருந்தும், வெளியே தடவ மருந்தும் எவ்வளவோ கொடுத்தும் சிரங்கு குணப்படாவிட்டால் பொதுவாக சிரங்கு, கொப்புளம், உண்டாக்கத்தக்க பூச்சிகளை அபிவிருத்தி செய்த திரவ பதார்த்தத்தை ஊசியால் குத்தி ஏற்றுவதுண்டு. இதிலும் சிரங்கு சௌகரியப்படாவிடில் சிரங்கிலிருந்து வரும் சீழ் முதலான பதார்த்தங்களைக்கொண்டு அதற்குக் காரணமான பூச்சியை அதிலிருந்து விருத்தி செய்து, ஒருசிறு துளியில் ஆயிரக்கணக்காய் அவை யிருக்கும்படி செய்து அந்தத் திரவ பதார்த்தத்தை ஊசியால் உள்ளே செலுத்துவார்கள். அநேகமாய் இந்த முறைக்கு சிரங்கு படிந்துபோம். இது ஹோமியோபதி முறை யென்றே சொல்ல வேண்டும்.

### பைத்தியத்தை மலேரியா போக்குகிறது.

பைத்தியத்துக்கு மலேரியா பரிகாரமென்று இப்போது புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. பைத்தியம் பிடித்திருப்பவர்களின் ஸ்திதி யாவருமறிந்ததே. அவர்களும் மனிதர்கள் தான்; ஆனால் அவர்களிடம் மனித சுபாவமே இல்லாமல் போய்விட்டது. மூளை சரியாக வேலை செய்து காரண காரிய சம்பந்தத்தை உணர்வது தான் மனித சுபாவம். சில வேளை மிருகங்களுக்கும் இந்தப் பகுத்தறிவு உண்டோ என்று சந்தேகிக்கும்படி அவை நடந்து கொள்கின்றன. ஆனால் பைத்தியக்காரனோ மிருகத்திலும் கேடு கெட்டவனாய்க் காணப்படுகிறான். அவனுடைய மூளையும் நரம்பின் வேர்களும் சில கிருமிகளால் கேடுண்டாக்கப்படுகின்றன. மூளையிலும், நரம்பின் வேரிலுமுள்ள ஸத்தினால் இந்தக் கிருமிகள் ஜீவிக்கின்றன. மரத்தின் மேல் புல்லுருவி மூளைத்து மரத்துக்கு வேண்டிய ஸத்தை அது கிரகித்துக் கொண்டு மரத்தின் வளர்ச்சிக்குத் தடை செய்வது போல் இக்கிருமிகள் மூளையைப்பற்றி நின்று அது வேலை செய்யவொட்டாமல் தடை செய்கின்றன. சில பைத்தியக்காரர்களுக்கு நரம்புகள் சரியாக வேலை செய்யாமல் ஒருவிதமான உணர்ச்சியற்ற தன்மை உண்டாய் விடுகிறது. இவர்களை சொஸ்தம் செய்வது முடியாத காரியமாக இருந்து வந்தது. சாதாரணமாக இந்த மாதிரி வியாதி வந்தவர்கள் நான்கு வருஷத்துக்குமேல் உயிரோடிருப்பது அரிது. மலேரியாவின் கொடுமையை எல்லாரும் அறிவர். இதனால் இன்னும் பல இடங்களில் அநேகர் இறக்க நேரிடுகிறது. இந்த வியாதி ஒருவிதக் கொசுவால் பரவுவதாக நாம் முன்னமே பார்த்திருக்கிறோம். பைத்தியத்திற்கு மலேரியா முறிவென்று எண்ணுவது பெரிய பைத்தியக்காரத்தனமாகும். மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் என்று சொல்வது போன்ற சம்பந்தமே இவ்விரண்டு வியாதிகளுக்கும் இருக்கக்கூடும். பைத்தியக்காரனுக்கு மலேரியாவை யுண்டாக்கி அதன் மூலம் பைத்தியம் தெளியுமென்ற எண்ணம் 1917ல் வியன்னாவில் ஆசிரியர் வாக்னர் ஜாரெக் என்பவருக்குப்பட்டது. சாஸ்திர ஆராய்ச்சிகளைப் பரிசோதித்தோமானால் அனேகம் திடீரென்று கண்டு பிடித்தவைகளாயும், வேறெதற்கோ பார்த்துக் கொண்டிருக்கையில் இது தட்டுப்பட்டதாயும் தெரிய வரும். வியன்னா ஆசிரியருக்கு இது என் தோன்றிற்று, எப்படி அவர் ஊகித்து அறிந்தார் என்ற விபரங்கள் நமக்குத் தெரியாது. மலேரியா ஜுரத்தால் பீடிக்கப்படுபவரிடமிருந்து ரத்தத்தை எடுத்து பைத்தியம் பிடித்தவர் தேகத்தில் ஊசியால் ஏற்றினார். இதனால்

குணம் தெரிந்து இவருக்குப் பத்து வருஷம் கழித்து மருந்து விஷயமாக நோபிள் வெகுமதி யளிக்கப்பட்டது. தீராத வியாதியான, இப்படிப்பட்ட பைத்தியம் பிடித்தவர்கள் கொஞ்ச காலத்தில் கட்டாயம் இறப்பார்கள் என்று நிச்சயமாய்த் தெரிந்த விஷயத்தில் வேறொரு கொடிய வியாதியை உண்டாக்கி அதன் மூலம் முதல் வியாதியைப் போக்கி, பிற்பாடு தாமாக உண்டாக்கிய மலேரியாவை கொயினுவால் சொஸ்தப்படுத்த வியன்னு ஆசிரியர் தீர்மானித்தார்.

### புதுமுறையை அனுஷ்டிப்பதில் கஷ்டம்.

ஆயிரம் பேரை (வேரை)க் கொன்றவன் அரைவைத்தியன் என்பது போல பலருக்கு ஒரே மருந்தை ஒரே வியாதிக்குக் கொடுத்து அதன் குணகுணங்களைச் சீர்தூக்கி அறிந்து, அதைப் பற்றி பத்திரிகைகளில் எழுதி, இதை வைத்துக்கொண்டு, ஒரே தேசத்தில் மற்ற வைத்தியர்களும், வேறு தேச வைத்தியர்களும் பரிசோதித்துப் பார்த்து ஒரு மருந்தும், அதன் அளவும் நிச்சயப்படுத்தப்படுகிறது. இப்படியிருக்கையில் இதுவரையில் எவரும் எண்ணாத ஒரு முறையைப் பரீக்ஷித்துப் பார்க்க திடபுத்தியும் தைரியமும் அதிகம் வேண்டும். புதிய முறை சரியாக வந்து விட்டால் எல்லாம் நல்லது தான். அந்த முறை சரியானதாக இல்லாமல் வியாதிஸ்தன இறந்து போனுல், சரியான முறைக்காக இவரைப்புகழ்பவர் பத்துப்பேருண்டானுல், தவறினதற்குக் குறைகூற ஆயிரம்பேர் முன் வருவார்கள். இந்தக் கஷ்டங்களை யெல்லாமறிந்தவர் டாக்டர் கிளார்க் என்பவர். இவர் வியன்னு ஆசிரியர் எழுதி வைத்ததைப் படித்திருந்தார். இவர் லங்காஷைரிலுள்ள பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் சூபரண்டண்டாயிருந்தார். வியன்னு ஆசிரியர் சொல்வது சரியாகப் பலித்துவிட்டால் அதனுல் உண்டாகும் நன்மை எவ்வளவென்று இவருக்குத் தெரியும். தம்மிடம் பைத்தியமாக வைத்தியம் செய்துகொள்ள வந்தவர்களுக்கு தம்மால் அதிகம் ஒன்றும் செய்ய முடியாமலிருப்பதைக் கண்டு இவர் வருந்தினுர். வேறு பல வைத்தியர்களோடும் கலந்தாலோசித்து தம்மிடமுள்ள ஒரு வியாதிஸ்தனிடமே புது முறையைப் பரிசோதிக்க இவர் எண்ணங்கொண்டார். இது 1922-ல் நடந்தது. 1923-ம் வருஷக் கடைசிக்குள் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் மலேரியாவைக் கொண்டு சொஸ்தம் செய்யும் ஸ்தாபனங்கள் 12 இடங்களிருந்தன. இதற்குள் சுகாதார இலாகாவுக்கு வேறொரு பெரிய சந்தேகம் உண்டாய் விட்டது. பைத்தியத்தைப் போக்க மலேரியாவைப் பலபேருக்குப் பரவச் செய்கிறுர்களே, இவர்கள் மூலம் கொசு மலேரியாவை சுகமாயிருப்பவர்களுக்கும் கொடுத்து விடாதா? மலேரியாவைத் தடுக்க எத்தனையோ கஷ்டப் படவேண்டியிருந்தது. பலர் கலந்து யோஜித்ததன் பயனுக சுகாதார இலாகா இந்தப் பரீக்ஷையை நடத்த சவுகரியம் செய்து கொடுத்தது. இதுவரையில் மலேரியாவால் கஷ்டப்படுபவரிடமிருந்து ரத்தத்தை எடுத்து பைத்திக்காரர்களுக்கு ஊசியால் ஏற்றினுர்கள். இனி மலேரியா ஜுரத்துக்குக் காரணமான பூச்சிகளை ஒருவரிடமிருந்து பைத்திக்காரர்களுக்குக் கொண்டுபோக கொசுக்களையே வளர்த்துக்கடிக்க விட்டார்கள். மலேரியாவைக் கொசுவால் உண்டாக்க முயற்சிக்குமிடத்தை நல்ல தகடுகள் போட்டு பந்தோபஸ்தாய்ச் செய்து வைக்கும்படிக்கும், அதற்குள் இருக்கும் கொசு வேறிடம் போகக்கூடாமலும் செய்து கொடுக்கப்பட்டது. இதற்காக அந்த வகைப் பெண் கொசுவைப் பிடித்து மலேரியா விருப்பவரைக் கடிக்கும்படி செய்து கொஞ்ச நாள் கழித்து இதுவே பைத்திக்காரனைக் கடிக்கும்போது இதன் தேகத்திலுள்ள மலேரியாப் பூச்சி இது குத்தின துவாரததின் வழியாக தேகத்துக்குள் போகும். சில நாளில் மலேரியா ஜுரம் வர ஆரம்பிக்கும். ஜுரம் அடிக்கும் போது மற்ற விடங்களில் ஓடுவதுபோல ரத்தம் மூளையிலுள்ள சிறிய ரத்தக் குழாய்களிலுமோடும். வெகுவிரைவாக ஓடும். மூளையிலும் நாம்புவேர்களிலும் ஒட்டிக்கொண்டு அவைகளைத் தின்று ஜீவித்துக் கொண்டிருந்த விஷப் பூச்சிகள் ரத்தத்தின் வேகத்தால் அடித்துக்கொண்டு போகப் படுகின்றனவோ அல்லது இவ்விருவகைப் பூச்சிகளும் ஒன்றையொன்று எதிர்த்து பைத்திய பூச்சியழிக்கப்படுகிறதோ விபரம் தெரியவில்லை. பலருக்கு இந்த முறையால் பைத்தியம் தெளிந்து சுகமாகத் தங்கள் வேலையைப் பார்த்துக்கொண்டிருப்பதாய் எடுத்திருக்கும் கணக்குகளிலிருந்து தெரிகிறது. ஒருவித விஷப்பூச்சியாலுண்டாகும் தீமையைப் போக்க வேறொரு விஷப்பூச்சி உபயோகப்படுவது மாத்திரம் கண்ணுல் பார்க்கிறோம்.



சிறுவர்கதை.

## மந்தன் கதை.

முன்னொருகாலத்தில் கோள நாட்டில் மந்தன் என்றவன் விறகு வெட்டியிருந்தான். அவன் பெயருக்கேற்ப ஒரு மதியீனனுக விருந்தான். ஒரு நாள் மந்தன் விறகு வெட்டுவதற்காகக் காட்டிற்குச் சென்று, ஒரு உயரமான மரத்தின் மேலேறி ஒரு பெரியகிளையின் மேல் உட்கார்ந்து கொண்டு தான் உட்கார்ந்திருந்த கிளையின் அடிபாகத்தைத் தனது கோடரியால் வெட்டிக் கொண்டிருந்தான்.



அப்பொழுது கைலாஸ கிரியிலிருந்து பரமேச்வரன் பார்வதி சகிதமாக பூலோகத்தில் நடக்கும் காரியங்களை பார்த்து வரலாமென்று ஆகாய மார்க்கமாகப் புறப்பட்டு வந்தார். பார்வதி பரமேச்வரர்கள் பூலோகத்தின் அநேக பாகங்களில் சஞ்சரித்துவிட்டு, கோள நாட்டையடைந்து மந்தன் விறகுவெட்டிக்கொண்டிருக்கும் ஸ்தலத்தை அடைந்தனர். அங்கு மந்தன் விறகு வெட்டும் விநோதத்தைக் கண்டதும், பார்வதி பரமேச்வரனைப் பார்த்து 'நாதா! நுனிக் கிளையிலிருந்து அடிக் கிளையை வெட்டும் இந்த மதியீனனைப் பாருங்கள், கிளை முறிந்து விழுந்தால் தானும் அதனுடன்கூட விழுந்து விடுவோமென்றுகூட இவன் புத்தியில் படவில்லை. இவனுக்கு நேரப் போகும் விபத்தை யறிந்து எனக்கு மனம் கலங்குகிறது. இவனை அந்த விபத்திலின்றும் எப்படியாவது தாங்கள் காப்பாற்ற வேண்டும்' என்ருள்.



பரமேச்வரன் "பார்வதி! அவரவர் மதிகெட்டச் செயல்களால் ஏற்படும் கஷ்டங்களை அவரவர் அனுபவித்தே தீர வேண்டும். இவனுக்கு ஏற்படும் விபத்தினின்றும் இவனை மீட்க நாம் தலையிடக் கூடாது. இவனுடைய கர்ம வினைப்பயன் இவனுடைய மதியை மயக்கி இவ்வாறு செய்திருக்கிறது. இவன் எவர் உதவியையும் ஏற்கமாட்டான். ஆகையால் நாம் இதைப்பற்றி கவலைகொள்ள வேண்டாம்" என்று பதிலுரைத்தார்.

லோகமாதாவான பார்வதி தேவி அதை ஒப்புக்கொள்ளாமல் மந்தனை எப்படியாவது மீட்கவேண்டுமென்று பரமேச்வரரிடம் கூறவே, பரமேச்வரன் மீண்டும் 'நாமாகச் சென்று இவனுக்கு உதவி புரிய வேண்டாம். இவன் கீழே விழுகையில் 'அப்பா' வென்று கூறி விழுந்தால் நான் காப்பாற்றுகிறேன். அம்மா வென்று அலறினுல் நீ காப்பாற்றிவிடு' என்று கூறினுர். பார்வதி தேவியும் அதற்குச் சம்மதித்தார் இருவரும் மந்தனுக்கு உதவி செய்யக் காத்திருந்தனர்.



இதனிடையில் மந்தன் தான் உட்கார்ந்திருந்த கிளையை முழுதும் வெட்டிவிட்டான். கிளையும் முறிந்து விழுந்தது. அதனுடன் மந்தனும் கீழே விழுந்தான். கீழே விழுகையில் மந்தன் தன் விதிவசத்தால் ஏவப்பட்டு, கஷ்ட காலத்திலும் தெய்வத்தை நினையாமலே, "ஐயோ! விழுந்தேனே! செத்தேனே" என்று பிரலாபித்துக் கொண்டே கீழே விழுந்து உயிர் துறந்தான்.

பரமேச்வரன், பார்வதியைப் பார்த்து "நான் அப்பொழுதே சொன்னேனே. இவனுடைய கர்ம பலன் இவனை விபத்தினிடமிருந்தும் காப்பாற்ற விடாது. தாமஸகுணம் நிரம்பிய இவ்வித மதியீனர்கள் அகம்பாவத்தை அடிப்படையாகக் கொண்டு விபத்துக்களையறியாமலே காரியங்களைச் செய்வர். அப்பா அம்மாவென்று கூறக்கூடாமல் அவன் வினைப்பயன் செய்துவிட்டது" என்று கூறி மற்ற விடங்களைப் பார்க்கச் சென்ருர்கள்.




## சில சில்லரை வியாதிகள்.

### ஜல தோஷம்.

ஸ்ரீமான் கோபால் எழுதியது.

மானிடர்கள், மிருகங்கள் இன்னும் மற்றுமுள்ள பிராணிகளுள், ஜலதோஷம் என்னும் வியாதி மிகவும் ஸர்வ ஸாதாரணமானது. அது மிருகங்களைவிட மனிதர்களுக்கே விசேஷமாய் அதிகமாய் உண்டாகிறது. ஜல தோஷம் என்றால் என்ன? ஜலம் என்றால் தண்ணீர் என்று பொருள், தோஷம் என்றால் குற்றம் என அர்த்தம். எனவே தண்ணீரின் குற்றம் என அருத்தம் செய்யலாம். அநேகமாய் ஜலதோஷம் அல்லது ஜளிப்பு எப்படி உண்டாகிறது என்பதை நோக்குங்கால், ஜலக் குற்றத்தினாலேயே உண்டாகிறது எனச் சொல்லலாம். ஆனால் ஜல தோஷத்திற்கு மற்றும் பல வித காரணங்கள் இருக்கின்றன.

ஜல தோஷம் என்ற வியாதியைச் சொல்பமாக அநேகர் எண்ணுவது போல் எண்ணக் கூடாது. நூற்றுக்கு, தொண்ணூற்றொன்பது தடவை ஜல தோஷத்தினால், விபரீதம் ஒன்றும் நேரா விட்டாலும், பாக்கி ஒரு தடவை மிகவும் ஆபத்தை விளைவிக்கக்கூடியது. ஜல தோஷத்திலிருந்து, தொண்டைக்கட்டு வருவது மிகவும் சுலபம். தொண்டைக் கட்டிலிருந்து, பிராங்கைடிஸ் என்ற வியாதி வருவது அதிகக் கஷ்டமில்லை பிராங்கைடிஸிலிருந்து, நிமோனியா என்ற ஆபத்தான கபவாத ஜுரம் வருவதும் அதிகச் சிரமமில்லை மேலும் ஜல தோஷத்திலிருந்தே, மூக்கைப் பற்றின சில வியாதிகளும், தொண்டையைப்பற்றின சில வியாதிகளும், காதைப்பற்றின முக்கிய வியாதிகளும் சம்பவிக்கின்றன என்பதற்கு தகுந்த அத்தாக்ஷிகள் இருக்கின்றன.

மேலும் ஜலதோஷமானது மற்றொரு விதத்தில் ஆபத்தானது. இது ஒட்டுவாரொட்டியைச் சேர்ந்த ஓர் வியாதி. வைசூரி, சின்னம்மை, தட்டம்மை, இவைகளைப்போல் தொத்து குணமில்லாவிட்டாலும் நெருங்கப் பழுகுகிறவர்களுக்குள், சுலபமாய் பரவுகிறது. ஸாதாரணக் குடும்பங்களில் புருஷனால் பெண்சாதிக்கும் பெண்சாதியினால் புருஷனுக்கும் ஏற்படலாம். தாய் தகப்பனால் முத்தமிடுவதனால் குழந்தைகளுக்கு ஏற்படலாம். ஆகையால் ஜல தோஷம் உண்டான பெரியவர்கள் கண் மூடித்தனமாய் குழந்தைகளுக்கு முகத்தில் முத்தம் தாக் கூடாது.

### ஜலதோஷம் உண்டாகும் விதம்.

ஜல தோஷம் எப்படி உண்டாகிறது? மற்றும் பலவித வியாதிகளைப்போல, ஜல தோஷமும், கண்ணுக்குத் தெரியாத மிகவும் நுட்பமான பாக்டீரியா என்னும் கிருமிகளால் உண்டாகின்றது. ஜல தோஷக் கிருமிகள் ஜன நடமாட்டமுள்ள எல்லாவிடங்களிலும், வியாபித்துள்ளது. அப்படியிருந்த போதிலும் எல்லோருக்கும், எப்பொழுதும், ஏன் ஜளிப்பு வாவில்லை என்றால், கிருமிகள் வேரூன்றிப் பிழைப்பதற்குச் சில முக்கிய அம்சங்கள் எப்பொழுதும் ஏற்படுவதில்லை. ஜல தோஷத்திற்கு முக்கிய காரணங்கள் யாவை?

(1) சீதோஷ்ண மாறுதல்:— நல்ல குளிர்காலத்திலும் நல்ல வெய்யல் காலத்திலும் ஜல தோஷம் விசேஷமாய்த் தோன்றுவதில்லை. குளிர் காலத்திலிருந்து உஷ்ணம் திரும்பும் போதும், உஷ்ண காலத்திலிருந்து குளிர் திருப்பும் போதும், விசேஷமாய்ச் சம்பவிக்கிறது. திடீரென்று இரவு ரயிலேறிக் காலையில் நீலகிரிபோய் அங்கே ஜாக்ரதையாய் இல்லாவிட்டால் ஜலதோஷம் வரலாம். அம்மாதிரியே நீலகிரியில் இருந்து திடீரென்று, உஷ்ணச் சமவெளிக்கு வந்தாலும், ஜலதோஷம் சம்பவிக்கலாம்.

(2) அசுத்தக்காற்று, புழுதிக்காற்று, சாக்கடைத்துர்கந்தம், இருட்டறை, சூர்ய வெளிச்சமில்லாமை, இவைகளால் ஜலதோஷம் உண்டாவதற்கு மார்க்கமிருக்கிறது.

(3) மிகவும் களைத்துப் போன சமயத்தில், வியர்வையுடன் அதிகத் தண்ணீரைப் பருகுவது, அல்லது, சிரமபரிகாரமில்லாமல் குளிர்ந்த தண்ணீரில் ஸ்நானம் செய்வது!

(4) எப்பொழுதும் வென்னீரிலேயே ஸ்நானஞ் செய்

வது ஓர் கெட்ட பழக்கம். வாயு உபத்திரவங்களினால் பீடிக்கப்பட்ட சிலருக்கு வெந்நீரில் ஸ்நானஞ் செய்வது நன்மையே. ஆனால் ஸாதாரணமாய் எல்லோரும், பெரியவர், சிறியவர், ஆண், பெண், பணக்காரர், ஏழை, முதலியவர்கள் குளிர்ந்த தண்ணீரில் முழு ஸ்நானம் பண்ணுவதான வழக்கம் ஏற்படவேண்டும். சகஜமாக வெந்நீரில் ஸ்நானஞ் செய்கிறவனுக்கு, ஜலிப்பு விசேஷமாய் வருவதற்கு மார்க்கமுண்டு. சிலர் எப்பொழுதும் கண்ட ஸ்நானம் என்று கழுத்து வரையில் ஸ்நானஞ் செய்கிறார்கள். அது முற்றிலும் கெட்ட வழக்கம். மலையாளத்தில் பெரியவர், குஞ்சு குழந்தைகள் உள்பட, யாவரும் குளிர்ந்த ஜலத்திலேயே, தலை முழுக நீராடுகிறார்கள்: கணக்கெடுத்தால் அந்த சமூகத்தில் ஜலதோஷம் கொஞ்சம் குறைவாகவே தோன்றும். இங்கிலாந்தில் கூட நமது சக்ரவர்த்தியான, ஐந்தாம் ஜார்ஜ் உள்பட, அநேகர் குளிர்காலத்திலுங்கூட, குளிர்ந்த தண்ணீரில் ஸ்நாநம் செய்வதாக நான் சில பத்திரிகைகளில் வாசித்திருக்கிறேன். அப்படியிருக்க, பாரதமக்கள் குளிர்ந்த தண்ணீரை உபயோகப்படுத்த ஏன் பயப்பட வேண்டும்.

(5) சுகாதார ரீதியில் இருப்பவருக்கு ஜலதோஷம் வருவது கஷ்டம். ஒவ்வொருவரும், சுத்தக் காற்றோட்டமுள்ளவிடங்களில் வஸிக்க வேண்டும்.; தூங்கவும் வேண்டும். பல்லைச் சுத்தமாய் வைத்துக்கொள்ளவேண்டும். மலச்சிக்கலுக்கு இடங் கொடுக்கக் கூடாது.

(6) டிராமா, ஸினிமா முதலிய ஜன நெருக்கமுள்ளவிடங்களுக்கு அதிகமாகப் போகக் கூடாது. இரவில் அதிக நேரம் கண் விழிக்கக் கூடாது.

ஜலதோஷத்தின் தோற்றங்களைப்பற்றி நான் விஸ்தரிக்க வேண்டியதில்லை. மூக்கடைப்பு, இருமல், நீர் ஒழுக்கு, மூக்குச்சளி, கெட்டி மூக்குச்சளி, முதலியவைகள் ஏற்பட்டு கடைசியில் வியாதி தானாகவே சொஸ்தமாகிறது. வந்தபிறகு அவஸ்தைப்படுவதைவிட வாராமல் தடுத்துக் கொள்வதே நலம். தடுத்துக் கொள்ளவேண்டிய விதங்கள் ஏற்கனவே ஒவ்வொன்றாகக் கூறிவிட்டேன். வந்தபிறகு என்ன செய்வது என்று சில முக்கிய குறிப்புகளை மட்டும் சொல்லுகிறேன்.

(1) வந்தவுடன் மலச்சிக்கலிருந்தால், இரண்டு தடவை மலம் போகுமாறு ஏதாவது உப்புகளைச் சாப்பிடவேண்டும். ஆமணக்கெண்ணெய் உதவாது. (2) பொறுக்கக் கூடிய வெந்நீரில் சீக்கிரம் ஸ்நானம் செய்து முடிக்க வேண்டும். (3) மிதமாய்ச் சூடான வஸ்துக்களைச் சாப்பிடவேண்டும். (4) டீ அல்லது காப்பி கொஞ்சம் அருந்தலாம். (5) சிரமமான சரீர வேலை ஒன்றும் செய்யக்கூடாது. (6) சுத்தக் காற்றில் உலாற்றலாம் (7) இரவில் ஜன்னல்களை நன்றாய்த் திறந்து வைத்து, கம்பளியைப் போட்டு சரீரத்தை மூடிக்கொண்டு தூங்கவேண்டும். (8) அதிக மூக்கடைப்பு இருந்தால் உஷ்ண நீராவியில் கொஞ்சம் சாம்பிராணி போட்டு மூக்கிற்கு இழுக்கலாம். (9) நவச்சாரத்தையும் சுண்ணாம்பையும் கலந்து அடிக்கடி மோந்து பார்க்கலாம். (10) ஜுரமிருந்தால் வைத்தியர்களிடம் காட்டவேண்டும்.

# அனுபவ விநோதங்கள்

(ஸ்ரீமான் எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு எழுதியது.)

மனம் என்னும் மனைவி:— "அடியே! என் கண்ணே! நாலுபேர் போஜனத்திற்கு வந்திருக்கிறார்கள்; சாப்பாடு தயாராகவேண்டும்" என்று வீட்டுக்காரன் சொல்லுகிறான். அதற்கு மனைவி சில சமயங்களில் முணு முணுப்புடனும் கேட்டுக் கொண்டு உள்ளே செல்கிறாள். அவள் எப்படிச் சென்ற போதிலும் போஜனம் தயாராகி இலைக்கு வந்து விடுகிறது. அது போலவே, இன்ன விஷயம் எழுத வேண்டுமென்று மனதுக்கு நாம் கூறிவிடின் சில சமயங்களில் சந்தோஷத்துடன் வேகமாய் அப்பொழுதே வேண்டிய சரக்குகளை எழுதுவதற்குத் தருகிறது. சில சமயத்தில் முணு முணுத்துக் கொண்டு மற்றொரு சமயம் திடீரென்று கொடுக்கிறது. எப்படியோ உடனேயோ, சற்று தாமதித்தோ மனம் நமக்குப் பிக்ஷைகொடுப்பதென்னவோ நிச்சயந்தான். அபூர்வமாய் இரண்டொரு சமயம் மனம் நமக்குக் கொடாமற் போவதுமுண்டு. "ஓ! அவர்களுக்கெல்லாம் ஆக்கிக் கொட்ட என்னால் முடியாது!" என்று மனைவி சொல்லி, ஒரு மூலையிற்போய் பாயைப் போட்டுப்படுத்துக் கொள்வதுமுண்டல்லவா? அப்படிப் போல மனமும் நமக்கு இணங்கி வராமற்போவதுமுண்டு. கட்டாயப்படுத்தி மனதினிடம் சரக்கை வாங்கினால் அது நன்றாக இருப்பதில்லை. மனைவியை அடித்துச்சமைக்கும்படிக் கட்டாயம் செய்தால் அந்தச் சமையல் இன்பமாக இருப்பதில்லை. அது போலவே மனதின் சமையலும்!

பழகுதலின் பேதம்:— சிறியோருடன் பழகல் அவர்களுடைய விளையாட்டு விநோதங்களில் கலந்து குதூகலித்துத் தன் உத்ஸாகத்தைப் பெருக்கிக் கொள்ளவுமாக இருக்கலாம். பெரியோருடன் பழகுதலோ நல்லறிவைக் கிரகித்து மகிழ்வதற்காகவாம்.

முகம் வேறுபடுதல்:— தன் அருகில் வந்தவன் தன் நண்பனென்று எண்ணிப் புன்னகையுடன் திரும்பிப் பார்க்கிறான். அவன் காலையில் தன்னுடன் சண்டையிட்டவனென்று தெரியவே தன் மகிழ்வையடக்கிக் கடுகடுத்த பார்வையுடன் தன் முகத்தைக் கருப்பாக்கிக் கொண்டு அந்தச் சிடுமூஞ்சியை அவனுக்கு முன்னே காட்டுகிறான்.

காலணா குறைகிறது:—இருந்த யாவற்றையும் சிற்சில சாமான்கள் வாங்கி வரும்படி ஒருவரிடம் கொடுத்துவிட்டுப் பஸ் ஏற இரண்டணா போதுமென்று $2\frac{1}{2}$ அணா மிச்சத்துடன் புறப்பட்ட ஒருவர் காலணா வெற்றிலைப்பாக்கு வாங்கிப் போட்டுக்கொண்ட பிறகு டிராம் வண்டிக்கு அரை அணா தந்து ஏறினார். பிறகு பஸ் இருக்குமிடம் இறங்கி அதற்கு இரண்டணாவை எடுக்கப் பார்க்க 0-1-9தான் இருந்தது. காலணா கடன் எவர் தருவார்? தன் பெயர் எங்கும் தெரிந்ததே. தன்னை இன்னாரெனக் காண்பித்தல்லவா கேட்கவேண்டும்? நெடுநேரம் திகைத்தார், பின் இவரையறிந்த ஒருவர் வர, அவர் மூலம் காலணா கிடைத்துப் பஸ் ஏற முடிந்தது. இவர் கௌரவப் பட்டம் பெற்ற தனவந்தர் தான்.

உலகம் பல தினுசு:— சிலருக்கு மார்க்கட்டுக்குப் போய்த் திரும்பிவருகையில் ஒரு தம்பிடி முள்ளங்கி வாங்கி வழியில் ஒரு கடையில் சிறிது உப்பு பிக்ஷை எடுத்து அந்த உப்பில் தொட்டு முள்ளங்கியைத் தின்று கொண்டே வழி நடப்பதில் வெகு பிரியம். சிலருக்குப் பக்ஷணத்தைத் தெருவில் புசித்துக் கொண்டு போகப் பிரியம். அதை இழிவு என்று எண்ணுவதில்லை. சிலருக்குத் தெருவிற் செல்லுகையில்தான் புகை சுருட்டு பிடிக்க விருப்பம. சிலருக்கு மாங்காயை உப்பிட்ட மிளகாய்த் தூளில் உண்ண வெகு அவா; சிலர் வெற்றிலைப் பாக்குக்கு உயிரைவிடுவர். உலகம் பலவிதச் சுவைகளைக் கொண்டது.

மறு தாரம்:—முதல் மனைவி மரித்தவுடனே மறுதாரம் வந்து விடில் முதல் மனைவியின் பெட்டி, சேலை, நகையாவும் பத்திரமாக இரண்டாவது மனைவிக்குச் சேர்ந்து போகிறது. இரண்டாந்தாரம் வாராவிடிலோ, புருஷன் நகைகளை விற்றுத் தின்று விடுகிறான். சேலைகளை மற்றவர் உடுத்திக்கொண்டு விடுகின்றனர். அவளுடைய பெட்டி இன்னொருவர்க்காகிவிடுகிறது. அவளது சயன அறையும் மதிப்பற்றுப் பலர் நுழையும் அறையாய்க் கேவலப்பட்டுப் போகிறது. ஆகவே, மறுதாரத்தால் நன்மையில்லாமலில்லை.

திட்டு மறக்குமா?:—திட்டிவிட்டுச் சிலர் பிறகு காலில் வந்து விழுகிறார்கள் சமாதானம் செய்து கொள்ளப் பார்க்கிறார்கள். எவ்வளவு வேண்டினாலும் திட்டுகளைக் கேட்டுப் புண்பட்டோராது மனம் அந்த வசைகளை மறந்து விடுமா?



